பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்றஹீம்.

இஃது

# பிஸ்மில்க்குறம்

தக்கலே மெய்ஞ்ஞான சொரூபராகிய

**பீரு முஹம்மது சாகிபவர்கள்**

திருவாய்மலர்ந்தருளியது

———


காயற்பட்டணம்

**கண்ணகுமது மகுதூ முகம்மதுப்**

புலவரவர்களால்

நன்குறச் சீர்திருத்தி


———


திருநெல்வேலி ஜங்ஷன்

**மு. கோ. மு. கோஸ் கனி அவர்களது**

மாடர்ன் பிரிண்டர்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

---

இஃது

# பிஸ்மில்க்குறம்

---

காப்பு-வெண்பா.

அவ்வ லமைத்தபுவி யாகாச மேல்றஷு
செல்வி லிருத்தியபின்சீராக—எவ்வுயிர்க்கும்
நல்லறிவை யீந்தவனே நானுன் பிசுமில்க்குறம்
சொல்லிடவே காத்தருள்வாய் துணை

விருத்தம்

நினைவுடன்பொருளு நிறைந்திடும்வகையும் நீதியும் பிசுமிலினூடே,
அனந்தமுந்தெரிய அருமதருளைக்க ஆதிதன்கிருபையினாலே
களஜுவமாகும் மவுலானுரூமி வழறினர் அஹதியத்ததிலே
மனமதுமகிழ அறிவையுமறிந்து வழுத்தினர் சதக்கத் துல்லாவே.

கண்ணிகள்

ஆதிபெரியோனே றப்பில் ஆலமீனையாதி
அகதுநிலைசமதாக ஆலநிறைந்தோனே 1
அஹதியத்திலுஹதியத்தும் வாகித்ததுமாகி
அருபவுருபத்துமே தானல்லவோதாத்து 2
தாத்தல்லவோபாத்தினது வாகிறுசிபாத்து
வாகிறுக்குள்பாத்தினுளன் ரகசியத்தின்பொருளே. 3
பாத்தல்லாவோதோத்திரமாய் தேத்திரத்தின் கலிமோ
ஆத்துமத்திற்கதுதானே ஐனென்றகலிமா 4
ஐனென்றகலிமாவை அறிந்துளத்திற்பொதிந்து
ஆசைதடுவிருபுறமும் தாபக்கபுசைனி 5
காபக்கபுசைனியுட கருவைவறியாமல்
காலமெல்லாங்குத்தரிவாய் போகுதே அல்லாகு 6

கருவுக்குள்ளோ கருவான கருவையறியாமல்
காலமெல்லாம் வீண்காலம் மாகுதே அல்லாகு 7

உருவுக்குள்ளேயுருவமில்லா வுருவையறியாமல்
உலகமெல்லாங்கருத்தறியாப் போகுதே அல்லாகு 8

கருவோடுதிளைவுமொன்று மிருப்பதறியாமல்
ஹபீபு தலங்கலக்கத்துக்குள் ளாகுதே அல்லாகு 9

ஐனுக்குள்ளேபொருளான அஹதிலொளிதுலங்கி
ஆலமெல்லாமுன்வாசம் வீசுதே அல்லாகு 10

ஆதிமுஹம் மதுதந் தீன்குலமேதழைக்க
ஆண்டவனேயுதவிசெய்வா யாமீனுமீனுமீன் 11

ஆமீனில்லதவிராத மூமின்குலத்தோரே
ஆமினுர்பெற்றெடுத்த ஆலதபிபொருட்டால் 12

மூமின் துலங்க ஏனைவோருமொலியாக
முன்னவன்தான்கிருபையினுற் றன்மனமகிழ்ந்து 13

சுத்தவனேபாற்கடவிற் கன்சில்மகுபிய்யா
உத்தமகுருசையிதிற குலுவந்துசொன்னுர் 14

எத்திசைக்கும்பொருள்விளங்கி யாவரும்வணங்கி
இசுலாங்குலத்திலனை வோருமொலியாக 15

பேர்பெருகும்பிகதுல்க்குறம் பெறனுலனைவோர்க்கும்
பீருமுகம்மதென்போன் பிரியமனமுற்று 16

ஆதிபருள்தூதரையும் யார்கள்குத்துபொலியும்
அனைவோரின் அடிபணிந்து அடியேன்றமிழுரைத்தேன் 17

வேதஇசுலாத்தின்குல மானவரேவின்வேன்
வெற்றியுள்ளபிகமிக்குற மெத்தக்கடலறிவு 18

அறிவானபொருள்தேடி அலைந்தலைந்துசாவார்
அறிவினுக்கும்தலமறியா தாவிவீணேபோவார் 19

குறையாதபொருளைரெம்பக் கொள்ளையிடஆசை
கொள்ளையிடப்பொருளுமில்லைக் கொடுப்பாருமில்லை 20

கொள்ளையிடப்பொருள்தேடிக் குவலயத்திலலைந்து
கொள்ளைகிடையாமல் மனக்குறையாலேவாடி 21

வில்லாமல் துயாமதி விறந்து போகவேண்டாம் .
வேண்டுமட்டுங்கொள்ளையிட விட்டாளந்தவீட்டை 22

அந்தவீட்டின் ரத்னமலை அனந்தங்கோடிருவியல்
எந்தமட்டுங்கொள்ளையிட எவர்க்குமனப்பொருத்தம் 23

திருடமனமுள்ளவர்கள் திருக்கலிமாப்பார்த்து
திருடமட்டுந்திருடிக்கொள்ளத் திருவாக்குங்கொடுத்தான். 24

திருடவலுவில்லாரும் தெளிந்துரமியாதார்
திருக்கலிமாத்தெளிவாகத் தினவர்க்கேயுரைத்தான் 25

ஆராய்ந்துநினைவுடைய நிலையை அறிவீரே
அறிவுக்குள்ளே அறிவான மறிவையறிவீரே 26

பராபரந்தனிலே பஞ்சவன்னமாகி
வேருநாராய்முளைத்தஇதம் வித்தையறிவீரே 27

நினவரேபிசுமிலதின் செய்தியறிவீரேல்
திருக்கலிமா அறநான்கு ஜெயாழுத்தையறிவீர் 28

எழுத்தெழுத்தின்பொருளுமென்ன எழுத்தினிறமென்ன
எழுத்தெல்லாம்உடலுக்குள்ளே எங்கேயெங்கேநிற்கும் 29

எழுத்துச்செய்புக்குணங்களென்ன எதற்குமுதலெழுத்து
எழுதாத அலிபெழுத்தி லிடத்தை அறிவீரே 30

தெழுமையுரீ துஎன்ன தாலிபுதம்கூத்துமென்ன
துய்மவுருப்புடன்ஹறுபு உறுக்காபோடேழும் 31

எழுவகைப்பொருளறியார் ஜாகிலாருமென்ன
இதையறிந்தால்சாகிதா முசாகிதாவுமென்ன 32

முசாகிதாமுருக்கபா முஜறாவுமென்ன
முக்காமிலாமுவாசிலா முபாக்கியாவுமென்ன 33

எழுவகைப்பொருளுமற்ற விதத்தைமெல்லாமுரைப்பேன்
இறைநாமம்பிசுமிலதின் பெருமைசொல்லக்கேளும் 34

பிசுமிலுடன்கலிமாவும் அலிபுநிலைமுன்றும்
வேதக்கடலாதியருள் விபாநிலைதன்னை 35

நிதமுடனறியார்கள் நெடுநாளும்பாவி
நிசமாகபிசுமில்நிலை கலிமாமுரீதறிந்தால் 36

துகமனென்னும்இபுலீசின் தோஷமணுகாது
துய்யவனினருள்பெற்றே சுகமாகவாழ்வீர் 37

நிசமாகமானும் நிலைக்கும்பிசகாது
நித்தனருள்பெற்றுச்சொர்க்க நெடுநாளும்வாழ்வீர். 33

உலகுதனிலேவருமவுத் தாகுமந்தநேரம்
உண்மையுடனோதியவர் உலகில்மவுத்தானால் 39

குலமிழந்துகுவலயத்தில் பாவிகளென்றாலும்
குலமான சகீதுடைய கோத்திரத்திலாவர் 40

பிசுமில்லாகிற்றகுமா னிற்றகீமெனப்பேசி
இயம்புவது இறைநாமம் பத்தொம்பதுஎழுத்தாம் 41
உயிர்வானவோரெழுத்துக் கோதிவுமுண்டு
நிச்சயமாயறிந்திருந்து நிலத்தில்மவுத்தானல் 42
துட்சணமாய்கொடுநாகம் பத்தொன்பதுநாவும்
தூர்படவேநீக்கிவைக்கும் துய்யோனருளாலே 43
அறிவாளபத்தொன்பது விபரமறிவதென்றால்
அழகானஷரீ அத்துடன் அன்புதரீகத்தும் 44
அதுமேலே அகீகத்தென்று மஹரிபத்துமாகும்
ஆதியுடன் முஹப்பத்தென்ற முகுத்தியாத்துமாகும் 45
ஏறுகின்றபாதைதில மியம்புமிதுவாகும்
ஏதமாகவணக்கதில யெட்டுமக்காமுண்டும் 46
இலங்குகின்றநாசூத்து மியம்புமலக்கூத்தும்
இதுமேலேஜபறூத்து லாகூத்துமாகும் 47
துலங்குகின்றஜெம்கூத்து பாகூத்துக்காட்சி
துலைவாதஆகூத்து தம்கூத்துாட்டு 48
அலங்காரம்எட்டுமக்காம் அறிவதன்றுய்ச்சொன்ன
ஐந்துவகைதிக்கிர்முறை யறிவும்வகைகேளும் 49
கலங்காததிக்றுஜலி கல்பியுடன் றூகி
காட்சிபெற்றசிற்றியுடன் கபியுத்திக்கிர்ஐந்தும் 50
ஐந்துமிதுவணக்கதில ஆறும்சொன்னபாதை
அழகுமக்காம்சொன்னதெட்டும் பத்தொன்பது அறிவாம் 51
பத்தொன்பதைஅறிந்தாலும் பிரிவறியவேண்டும்
பாதைமக்காமுடவணக்கம் பங்குவகைகேளும் 52
பங்குகளுமதினுடைய பாங்கானயாதும்
பார்வைதனிற்றேனுவது பலன்பெறுதாட்கெடுவும் 53
சிங்காரமாகவெல்லாஞ் சிறப்பாகவிரித்துச்
ஜெகமறியசெய்பித்திற சூவியப்பிஞரே 54

வசனம்

இனிமேல் பங்கு நாம் விபரஞ் சொல்கின்றது முத்தினபாதை ஷரீஅத்துக்கு முந்தின மக்காம் நாசூத்துக்கு முந்தின வணக்கம் திக்கிர்ஜலியென்றும் அதின் விபரத்தையும் யதையும் பிரித்துச் சொல்லுகிற விபரத்துதுக்கும் மறைபொருளான (கவி) முந்தினவிபரம் இசுலாமான பேர்களுடைய அடையாளம் சொல்கின்றது.

### விருத்தம்.

வித்தில்லா மாமரத்தாள் மூனைத்தவாறும்
விருட்சத்தில் அறுநான்கு பணைநின்வாறும்
கொத்தோடே பணர்நூறு கொண்டவாறும்
குவலயத்தில் தீன்குலம் தாளவாறும்
எத்தனையோ கோடியிலை யிதழின்வாறும்
எண்ணுமலை யெழுதும் பொருளின்வாறும்
பத்தோடே இரண்டுபண நிலைத்தவாறும்
பழமொன்று திண்ணுமல் தின்றவாறும்
உற்றபணர் பனிரண்டி லேறுவாறும்
ஒத்தமலர் பூத்ததுவே நற்றுவாறும்
சத்தமாம் நத்தினதை நத்துவாறும்
சலாமத் சாவுமுன் சாவுவாறும்
எத்திசையு மில்லாத ஊரிச்வாறும்
எடுத்தாடும் பாதையின்மே லேறுவாறும்
இத்தனையுங் குறையாம லறிந்தபேரை
இசுலாந் தங்குலமென்று இயம்பலாமே.

### கண்ணிகள்.

முத்தினாதுஷரீஅத்தின் மொழிவிபரமென்றும்
முதற்கலிமாச்சொல்லி ஈமான்கொண்டிகலமாகி.

ஆறாண்டுபொருளறிந்து அதன்படியே நடந்து
அல்லாஒருவன் அழியாதவனேயென்று.

நின்னயமாய்வணக்கமென்று நினைவுகொண்டுநாடி
நீதிநாசூத்தென்றமக்காம் இடதுமார்பைநோக்கி.

வாயாலேயோதுகில் திக்கிறுமேல்நினைவாய்
வணக்கமுடனோதுவதும் வழமையுள்ளதெல்லாம்.

மாயுமுன்னேமாய்கிறது மகிழ்ச்சிகுறலோசை
மறைகளெல்லாமோதுகிறது மார்க்கம்வழியாகும்.

நார்புகழும்நபியிறசூல் நடத்தஷரீ அத்து
நாசூத்துமக்காம்திக்கிர்ஜல்லி நமக்கடையாளம்.

அடையாளமுதல்வழமை யாகும்ஷரீ அத்து
அதைச்சேர்த்தஐத்துதிக்கிர் ஐந்துயாதுமுண்டும்.

இடதுமார்பைநோக்கி வலமாகத்தலைசுழற்றி
யேத்தமிலேஇருவிழியும் புருவத்திடைநோக்கி.

திடமாக இருநூறு யாதுமுடிவாகும்
திருக்கியேதாழவா மிட துதிமிர் திலேபிலேத்தி 9
மடக்கிமிருபார்வைகுறை யாமவிடமார்பில்
மசிழ்ந்தூணிப்பார்க்க அதில் மலகுமொன்றுதோன்றும் 10
தொடுக்குந்திக்கிறிதுநாமம் பிருக்காத்தியாகும்
தொனிபாகவுள்ளியுள்ளிப் புவிநோக்கிச்செய்தால் 11
ஒடுக்கமுறைமிதுதானே ஓதுகிறதாகும்
உள்ளியுள்ளியெழுப்புவது உயர்பாசாளபாசமென்பார் 12
மடக்காமலிருந் துசெய்தால் மறுகூபிமிதுதான்
மறுதோழிலடித்துச்சிரம் முயர்த்துவதுதமரி 13
முடுக்காசஐந்துவகை யாதறியச்சொன்ன
முன்னெழுத்தைவிருத்துமுச்சில் முடிவெழுத்தையுயர்த்த 14
உண்ணியுன்னிறியாமல் ஓதும்யாதுஐந்து
ஓதுவதுலாஇலாகா இல்லல்லாகுறன்று 15
அல்லாகுஎன்பதொன்று ஆதமென்பதொன்று
அப்புறமும்இல்லும் அருமதுமுகம்மதைத்தாம் 16
அருமதுமுகம்மதென்றும் ஐந்துப்ஷரீ அத்தாம்
ஆறிரண்டுமாதம்தவஞ் செய்யமலர்காணும் 17
வகையானமலர்தெரியாதிருந்தாலுஞ்சரியே
வனமான யாதிலொன்றை வருந்தி லட்சமோதில் 18
ஓயாமலோதினவர் உம்மத்தவர் நிஜமாம்
ஒழுங்காகஇந்தமுறை தெளித்துவழமானால் 19
மாயாமலமாயுமன துள்ளமதியோர்க்கு
மகத்வமானதரீக்கத்ததின் மகிமைசொல்லக்கேளும் 20

வசனம்

இரண்டாவது பாதை தரீக்கத்துக்கு இரண்டாவது மர்கம் மலக்கூத்துக்கு இரண்டாவது வணக்கம் திக்கீர் கலபியென்றும், அதின் விபரத்தையும் வணக்கத்தையும் யாதையும் பிரித்துச்சொல்கின்ற விபரத்துக்கு மறைபொருளான (கவி) இரண்டாவது ஆவிகளுடைய அடையாளஞ் சொல்கின்றது

விருத்தம்

அறநான்கு பணறுன்ன மாததின்வாறும்
அத்தமாய் வைத்தானே உண்டவாறும்

ஒருபத்து ரண்டுபணர் பிரிந்தவாறும்
உள்ளிதழ் துளையறிந்து ஓதுவாறும்
அறுபத்து நாலுகலை யோடும்வாறும்
அட்டதிசை பொருந்தியே நிற்கும்வாறும்
மாமாக அட்டதிசை யாடும்வாறும்
வட்டத்தில் உருவைத்து பிரிந்தவாறும்
இநவாலும் தலைவொன்று இருக்கும்வாறும்
இருகழியும் ஒருகழியா யிலங்கும்வாறும்
உருவில்லா துருவையுரு வறிந்தவாறும்
ஓசையொன் றேயாம லோதுவாறும்
வாருக வாசிவட்ட மிட்டவாறும்
வான்புவியும் காணமல் மறைந்தவாறும்
ஆரய்ந்து இப்பொருளைச் சொன்னபேரை
ஆலிமென் றுலகத்தில் அறியலாமே

கண்ணிகள்

திறமானதரீக்கத்தின் விபரமென்னவென்றால்
தீனானகலிமாவில் அறுநான்குஎழுத்து
பாவுடலிற்றரிக்குந் நிலை பறுலுபனிரண்டும்
பாங்குடையவிபரமுற்ற பரன்மறையின் பொருளும்
தன்னுக்குள்ளேதனையறியத் தாய்தகப்பன்பங்கும்
தவமறியஇறையறியத் தலைமைநிலையறிய
மன்னரானநபியின் பங்கும் மலக்குகளின்பங்கும்
மற்றுமுள்ளபொருளையெல்லாம் பிரித்துதன்னுருவறிந்து
கற்றவனைவணக்கமென்று கருத்துக்கொண்டுநாடி
கபிதிக்கீர்வாயினுள்ளே காதுமட்டுங்கேட்க
அல்லும்பகலோயாமல் வாயினுள்ளேதிக்கீர்
அதற்கிரண்டாமானமக்காம் மலக்கூத்திருசாசி
இருநாசிநடுநிலையி லிருபார்வையிருத்தி
யேத்தகுதறத்துமல கிருதயத்திலேற்றி
பார்த்தல்லவோவணங்கின்றது கபிதிக்கீருமும்
பயமானதம்முநிலை பாதைவெளிகாண
ஜயங்கொண்டங்கேறுகின்ற ஏணிப்படியென்று
எத்தநுள்ளதர்க்கத்தென்றே இதுவுமறிவீரே

இதுதானேதரீக்கத்தின் வளமைதிலியாகும்
இவ்வணக்கம்செய்யுமுறை யாதுவகைஐந்தும் 10

இதரசகஇல்லும்அல்லும் அல்லாவெண்பதொன்று
இன்னமிதேஅக்லாகூ ஹக்கல்லாகுமாகும் 11

எதாலும்ஒருயாதை இருதயத்தில்பிடித்து
எப்போதுமிதைத்தானே யெடுத்தாடும்விபரம் 12

விபரமென்னவரமினுள்ளே விள்ளாமலோதும்
விளப்புவதிலவர்நினைவை விட்டும்பிசகாமல் 13

இருபார்வையிருமூக்கு நுனியிலதைப்பொருத்தி
எதிரசகதடுமார்பின் குழியில்விழும்விதமாய் 14

தளம்பாமலிருபார்வைத் தலமும்ரண்டும்பொருத்தத்
தலைமடக்கிப்பிசகாமற் றவநிலைவைப்பொருத்தி 15

இருத்துவிழிபிசகாமற் பொருந்திப்பார்த்துவருகில்
இருபார்வை நிலைதனிலே விலங்கிமலராடும் 16

இருநூற்றிருபதுமே லேறச்செய்யும்யாது
இப்படியேயிருமூன்று மாதமிதின்கெடுவாம் 17

உருவானதோத்திரங்கள் தெரியாதபேர்கள்
ஓதினதைஒருநூறு மிரமுமதைஒத 18

குருவாமுகம்மதின் றங் குலத்திகலாமாம்
குதா இறையேசொன்னபடி யுயர்ந்தகுலமாகும் 19

இதுதான் தரீக்கத்தென்றே யெடுத்துநன்றும்சொன்னேன்
இதமாகஹக்கீகத்தினி யெடுத்துரைக்கக்கேழும் 20

வசனம்

மூன்றுவதுபாதை ஹக்கீக்கத்துக்கு மூன்றுவதுமக்காம் ஜூப ரூத்துக்கு மூன்றுவதுவணக்கம் திக்கீர்றூகியென்றும் அதின் விபாத தையும் வணக்கத்தையும் பாதையும் பிரித்துசொல்லுகின்ற விபாத் துக்கு மறைபொருளானகவி

இனி ஆபிதகளுடைய அடையாளத் தெரியச் சொல்லுகின்றது.

விருத்தம்

குடியில்லாவீட்டில் குடிகொண்டவாறும்
கொடியஇருளலவொளிவிலங்குவாறும்
அடியோடேகலிலெல்லா மகன்றவாறும்
ஐந்தெழுத்து மூன்றெழுத்தா யமைத்தவாறும்

குடியானபேர் நிலைமை யற்றவாறும்
    கொற்றவனும்குடியொன்று தனித்தவாறும்
வடிவொன்றுநிறமூன்று கலையின்வாறும்
    வருந்தியொன்றையொன்றுதான் வணங்கும்வாறும்
முடியாதகலையோதத் தொடர்ந்தவாறும்
    முனைதப்பித்தாழ்ந்தநல மானவாறுக்
அழியோடேசாய்ந்தமா மெழுந்தவாறும்
    அத்தனையுங்கனியாகச் சொரித்தவாறும்
படியாதவேதகலை பாடுவாறும்
    பார்க்காமல்பார்த்ததொரு கூற்றின்வாறும்
அடியோடேயிப்பொருளைச் சொன்னபேரை
    ஆபிதென்றே யுலகத்திலறியலாமே

கண்ணிகள்

வாகுடனே அக்கீக்கத்தென் றெவருஞ்சொல்வாரறியார்
வகைவிபரந்தெரியதன்றாய் வகுத்துச்சொல்லக்கேளும்

துகையானவுடலுயிரு முழுதுமுள்ளதெல்லாம்
துய்யவன்றன்பாங்குஅல்லா தோழர்நபிபங்காம்

நகையாததாயன்பங்கு நமக்குப்பறுலாகும்
நாயன்றன்வணக்கமெல்லாம் நபிக்குச்சுன்னத்தாகும்

பகையாததபியிறசூல் பங்குசுன்னத்தாகும்
படைத்தவனைவணங்குமது பறுலுநிலையாகும்

வகையானகலிமாவில் வரிசைரண்டெழுத்து
வல்லவனும்நபியுமொன்றாய் வரைந்தவுயிரெழுத்தே

ஜெகத்திலுள்ளதன்மைதின்மை சேரத்துகையெழுதும்
சிங்காரமலக்குகளும் செய்தியறியாமல்

சுகமாகஅவரவர்கள் செவியிலுப்கேளாமல்
சொல்லாதேவாய்திறநது சுழன்றுவருமூச்சில்

என்னளவும்பிசகாமல் இருதயத்தில்நினைவில்
எத்துவதுஇறைபறுலாம் இறக்கச்சுன்னத்திரசூல்

ஆத்துமத்தில் ஒருமூச்சங் கதியுடன்போனால்
அந்தமூச்சு அச்சணமே யழிந்துமவுத்தாகும்

பாத்திரமாவொருமூச்சு யாதுதப்பிப்போனால்
படைத்தவன்கிருபையுட பரமதுகிட்டாதே

பாத்திரமாமூச்சிவது தப்பாமலிருந்தால்
பக்தியுடன் புத்தியுள்ள பாங்குதீக்கீறுகு 11

முத்தொளிவுஜபறாத்து மூன்றுமக்காமாகும்
முகத்துநடுப்புருவத்திடை முறுக்கிவிழிநோக்கி 12

ஒத்தநிலையாம் அளிவை யுவந்துமுச்சுடரை
ஒதுங்காமல் நினைவுக்குள்ளே யோர்மைநிலைநிருத்தி 13

எத்தேயகாலமுமே யுறக்கமில்லா நினைவு
இலங்குதுபார்முச்சுடரும் இறைநபியும் ஆதம் 14

கத்தநினைவறியும்ஹக்கீக் கத்துஜபறாத்து
காட்சிதிக்கிர்றாகிபுட கணக்குஇதுதானே 15

இதைச்சேர்ந்தயாதுவகை ஐந்துவிறமுண்டும்
ஏற்றிறக்கம்பாக்கீமு யாறகீமுமாகும் 16

மாற்றுந்தவம்நிறலகீமும் மருபூபுமாகும்
மனமகிழ்த்துஹக்கில் மவுஜூதோடேஐந்தே 17

இதுயாதுஐந்திலொன்றை வெளியிலும்வில்லாமல்
விடுமூச்சில்விசைவிசையா யேற்றிறக்கம்செய்ய 18

இதமாகமுக்கோண மாயிருந்துகொண்டு
இருமுழங்கால்மீதிலவர் இருமுழங்கையிருத்தி 19

விதமென்னவிற்போலே வளைந்துதலைகுனிந்து
விழித்துஇருபார்வைநடு புருவத்திடைநிறுத்தி 20

அதுநிலையில்அளிபான முச்சுடரைநினைத்து
ஆடிவரும்மூச்சிலவர் யாதுநிலைதொடுத்து 21

இதமாகஇருநூற்றி ஐம்பதுயாதாகும்
இப்படியேமாதமொன்று ஏற்றிறக்கச்செய்தால் 22

அதிவமுள்ளமுச்சுடராய் அளிபுமப்பேசதோணும்
அத்தநிலைதெரியாம லிருந்தாலும்சரியே 23

இந்தவிதமாயிருந்து எடுத்தோதும்பாதை
இருபத்தையாயிரந்தா னோதிமுடிவானால் 24

முந்தமுகம்மதுதம் சன்னத்துஜமாவாம்
முகம்மதர்தங்குலமாகு மோசமில்லையென்றும் 25

இதுதானே ஹக்கீத்தென்றேயெடுத்துநன்றாய்ச்சொன்னேன்
இதமாகமகரிபத்தை யினியுரைப்பதாவே 16

### வசனம்

நான்காவதுபாதைமஹரிபத்துக்கு நாலாவதுமக்காம் லாகூத்துக்கு நாலாவதுவணக்கம் திக்கீர்சிற்றியென்றும் அதன் விபரத்தையும்,வணக்கத்தையும் பாதையும் பிரித்துச்சொல்லுகின்ற விபரத்துக்கு மறைபொருளான கவி இனி காமிலானபேர்களுடைய அடையாளஞ்சொல்லுகின்றது.

### விருத்தம்

ஆறுநாறுயிரமொன் றுளவாறும்
ஆறுகலைநூறு மூன்றுடும் வாறும்
நேரெதிரேநின்றவர்கள் ஒளித்தவாறும்
நின்றவர்கள் புவிநோக்கிப் படுத்தவாறும்
பாராமற்பார்த்தபூ மலர்ந்தவாறும்
பத்துநூ றெட்டுமலர் மலர்ந்தவாறும்
விருண இதழைந்து விரிந்தவாறும்
வெண்டாளக் கோட்டைகுடி கொண்டவாறும்
பூரணத்தை காணுமல் கண்டவாறும்
புதுமையென்றபேர்கூடப் புகன்றவாறும்
மாருதமதுவெறியைக் குடித்தவாறும்
மந்திரகலை வெத்திரத்தை மறந்தவாறும்
ஏருதகொழுமீதி லேறும்வாறும்
இருபேரும்ஒருகுதிரை யேறும்வாறும்
காரணமாயிருப்பொருளைச் சொன்னபேரைக்
காமிலென்றெதிர்கொண்டு காணலாமே

### கண்ணிகள்

எத்தமுள்ளமஹரிபத்து எந்தவிதங்கேளும்
இலங்குதுபார்லாகூத்து இருபார்வைமுடி 1

பார்த்தாலோவிழிசுழட்டிப் பாதாளநிலையில்
பயகாம்பர்துபுல்வத்திலே பதினுவிலொன்றும் 2

தோற்றுதுபார்காட்சியெல்லாம் தொகைகளெல்லாமறிந்து
துலங்கும்இகலாத்தினடுத் தெளிவொளிவையறிந்து 3

கலங்காததினைவுஅல்லா காட்சிநபிமிறகுல்
ஹக்கும் அதுநபியும் அது கருத்துட்பிசகாமல் 4

மலங்காமல்மறக்காமல் மறுபேச்சில்லாமல்
மாதிலத்தில் வணுறக்க மானதொக்கமறந்து 5

இலங்கும்நிலாகூத்து மகரிபத்துவெளியில்
ஏகமெல்லாமறக்கும்திக்கீர் சித்திபிதுதானே 6

இதுதானேமஹரிபத்து இதற்குஐந்துயாது
இருத்தியோகூ அல்லாகூஅல்லாவும் இன்னப்கூவும்ஹக்கும் 7

அத்தகூவைமாற்றுவது அழுத்திக்குன்கூவுதும்
தினதினமும்குன்னென்பதை அனுப்பிசகாதிதுவும் 8

இந்தயாதுஐந்திலொன்றை மிருதயத்திற்பிடித்து
இருபார்வை நுனிமூக்கு மார்குழிமிற்றரித்து 9

பந்துமலர்விருசுழற்றிப் பார்வையுள்ள இடத்திற்
பார்த்துவிழிமுழிப்பதிலு மூடுவது இதமாய் 10

இந்தவகைஇருநூற்றி யிருபத்தைந்துயாது
இடைமிசகாதொருமாதம் இந்தவமேசெய்தால் 11

இந்துகதிரொளிபோலே யிலங்கிவட்டந்துலங்க
ஈரேழுநுபுவ்வத்திலொன் றெதிராகத்தோன்றும் 12

இந்தவகைதெரியாம லிருந்தாலுஞ்சரியே
இந்தபாதைஈரேழும் ஆயிரமிப்படியே 13

சிந்தாமற்செயப்படுத்தும் பேர்கள்மதிமரப்பார்
ஜெகமறிய செய்மிதிர குலுறைத்ததாலே 14

இந்தவகைமஹரிபத்தென் நிலையறியச்சொன்னேன்
இதற்கதிகம்முகப்பத்ததின் விதமுமறிவீரே 15

வசனம்

ஐந்தாவதுபாதை முஹப்பத்துக்கு ஐந்தாவது மக்காம் ஜெம் கூத்துக்கு ஐந்தாவதுவணக்கம் திக்கீர்கபியுடைய முதலாவது வகையும் அதின்வணக்கமும் பாதையும் பிரித்துச்சொல்லுகின்ற விபரத்துக்கு மறைபொருளான கவி

இனி குருமார்களுடைய அடையாளஞ் சொல்லுகின்றது.

விருத்தம்

தாட்டமிரண்டு மொன்றுனவாறும்
நடுவிலொருகலைமானைத் தேடுப்வாறும்

ஒட்டமாயிரு வேடன் வந்தவாறும்
　　ஒருமானும்ஒருகிணற்றி லொளித்தவாறும்
தேட்டமாபோடிஎவர் திகைத்தவாறும்
　　திருமானைத்தீண்டாமற் பிடித்தவாறும்
ஆட்டமாயறுக்கமா லறுத்தவாறும்
　　ஆருகவைத்தொன்றைச் சமைத்தவாறும்
கூட்டமாய்க்கூடியபே ருண்டவாறும்
　　கூட்டமொன்றில்லாமற் றணித்தவாறும்
போட்டபங்காறுமொன் ருளவாறும்
　　பெண்மானைக்கலைசேர்ந்து புணர்ந்தவாறும்
காட்டினிடப்புலியைமான் றேடும்வாறும்
　　கானகத்துக்குப்புலியையமா றுண்டவாறும்
நாட்டிலேஇப்புதுமை தன்னைச்சொன்றால்
　　நாமவரைக்குருவென்று நாடலாமே.

கண்ணிகள்

அலங்காரப்பொருள்தெரியு மறிவுநிலைதெரியும்
ஆதியின்றன்முஹப்பத்தென்ற ஐந்தாமக்காம்விபரம்
இலங்குதுபார்ஐனுல்எக்கீன் ஏகனிலைசுழட்டி
இடைமுடிஜெப் கூத்து ஹக்கும்என்னிலையில்
வலமிடமும்நடுநிலையில் வைத்துப்பிசகாமல்
வருமுச்சை அடக்கியேயுள் விருத்திமனம்பார்க்க
துலங்குதுபார்குதறத்தது ஆயிரத்தெண்மலராம்
கல்தான்நசீருவென்ற துய்யநுகத்தொளிவு
நிலையாகவேஅலிபு நீண்டுநடுநிலையில
நிற்கிதுபார்நூனின்வட்டம் நுக்த்துக்குருநாதம்
தலைமேலேகூவுமது தரித்திங்கீழ்மீமாம்
தவநிலையிற்பெரிதான முருஜிதாத்துமாகும்
கமலமென்றமீம்தலையிற் காணும்விண்ணுலகில்
காணும்ஐந்துறுகில்நடுக்குத் தூசிகுதுபுதையம்
இதுதானேமதிவிருத்த முச்சுடரைந்தெழுத்தும்
இன்னங்கனிமாவுவிரும் காவும் கூவும் கீயும்
அதுதான் அல்லாகுவென்று அழகானகூட்டில்
அங்கமுருத்தெரியிதுகண் ணுடிக்கனிமாவில்

அதுதானேயவனெளிமி லன்றுபிரிவாள
அதுதான்குத்தூசிமுன்னே தாமிருந்தரூபம் 10

அதுதானேபால்கொடுக்க ஆச்சரியமாகும்
அதுதானேயறிவுசொல்லும் அறுதிமினுள்செல்லும் 11

அதையறிந்தால்ஆகிறத்தில் அதிதீதாறுண்டும்
அறியார்க்குதீதாரங் கணுவுங்கிடையாது. 12

இதைத்தான்குத்தூசியென்று இருதயமாய்ச்சொன்னேன்
இன்னம்வகைசொல்லுவதை யெல்லோருங்கேளும் 13

எல்லோர்க்குமுபகார மாகச்சொல்லும்விசனம்
இதிலும்ஐந்துயாதுண்டதில் இதற்குமுன்றயாது 14

சொல்லாமல்ஹாஹிவென்று சுழித்துஹாஹாவென்று
சுழித்தமூச்சையாகூ அல்லா வென்றுசொல்வதொன்று 15

இந்தபாதைக்குருவுரைத்தே தம்மாகத்தொடுத்து
இருசுடருமேத்தியுள்ளே நடுச்சுடரைத்தோற்றி 16

ஒத்துவரும்வாசியுடன் உள்ளெழுத்தைப்பூட்டி
உறுதிநினைவலையாமல் உள்திலைவில்மாட்டி 17

பத்திபுத்திபார்வைவனம் பலதுமொன்றுய்த்தொடுத்து
பத்துப்பத்தாப்பத்துஉரு பத்துதிரமானல் 18

மெத்தப்பெரிதானவகை மேலவன்குனறிவான்
மேலானபாதையிது மேலதிலப்மெத்த 19

ஆலமதிலுள்ளகுலம் ஆர்குலமென்றுலும்
அச்சணமேதீன்குலத்தி லானவொலியாகும் 20

நாம்மறைவிலிறையுரைத்த உட்பொருளுமிதுதான்
நாயன்றன்னைவணங்கச்சொன்ன நடப்புமிதுவாகும் 21

உத்தசெய்தியாகஇதை ஒளியாமற்சொன்னேன்
உலகவரேயிதைச்சேர்த்த பாகூத்தைக்கேளீர் 25

வசனம்

ஐந்தாவதுபாதை முஹப்பத்தைச்சேர்த்த ஆறுவதுமக்காம் பாகூத்துக்கு ஐத்தாவதுவணக்கம் திக்கீர்கபிலைச்சேர்த்த இரண்டாவது பிரிவையும் அதின்வணக்கத்தையும் யாதையும்பிரித்துச்சொல்லுகின்ற விபரத்திற்கு மறைபொருளான கவி

இனி குருமார்களுடைய அடையாளஞ் சொல்லுகின்றது

விருத்தம்

வீட்டிலே யொருவன்குடி யிருக்கும்வாறும்
வெளியிலிருபேர்காவ லிருக்கும்வாறும்
கூட்டியேமூவரையும் சேர்க்கும்வாறும்
கூடாமல்மூவரையும் பிரிக்கும்வாறும்
ஆட்டியேயிருவரையும் அமர்த்துவாறும்
ஆறிரண்டுபேரொருவ ரானவாறும்
ஏட்டிலேயெழுதாத கலையின்வாறும்
எழிரண்டுரேகையொன் றுனவாறும்
நாட்டாமனுட்டுமொரு வாசல்வாறும்
நாலுபத்துமூன்றுவீ டானவாறும்
வெட்டாதகுளத்தில்மான் குடிக்கும்வாறும்
வீதியைந்துகோட்டையை மால்சுமக்கும்வாறும்
கட்டாத கொலுமேடை காணுவாறும்
கன்னிகொலுவிருந்து கதைபாடுவாறும்
பாட்டிலுள்ள பொருளறிந்து சொன்னபேரைப்
பாருலகில் குருவென்று பணியலாமே

கண்ணிகள்

இதைச்சேர்ந்ததின்னம்ஏன்று யாகூத்துநிலைமை
இதுவுந்திக்கீர்கபிலாகும் முஹப்பத்துவெளியில்
மதிபோலேஐனுள்ளக்கீன் நிலைநிறுத்திமூடி
மனதுக்குள்ளேதினைவுதன்னை மகிழ்ச்சிகொண்டுபார்க்க
விதமாகப்பதினுன்கு நுபுவ்வத்தப்போதெரியும்
வெற்றியுள்ளகல்புக்கடல் புத்திசமான்வட்டம்
அதுதானேவெள்ளைவட்டம் ஓங்காரசமான்
ஆதமல்லோபச்சைவட்டம் அதிற்பவளம்நபியும்
மதிபோலேமுச்சுடரு மானநிறக்மூன்றில்
மக்காமின்மகுமூதா நடுநிலையின்நீலம்
பதியெல்லாம்புகழுமகு முதுதிருவடியிற்
பளிங்கிலுந்தெளிவான பரன்பொருளினொளியே
இதுதானேநாகுதிலை இலாகுதினைவாகும்
இரவுபகலாகுமிது இருநாகிவாய்வு

நினைவுமது நினைவுதன்னை நினைவுகொண்டுபார்க்க
நினைவுகுள்ளேநிலவுபோல நிற்குமேகண்ணாடி 8

கண்ணாடிக்குள்ளொளிவு காணும் வஸ்ருபம்
முன்னாலேநாமிருந்த மவுனமகுத்தூக 9

அறியும்வகைபாகூத்து அதற்கிரண்டுபாது
அலங்காமல்பாகூவென்று அழுத்திடபரேத்த 10

குலுங்காமல்யாகூவுடன் கோர்த்துஒருமீமைக்
குலுக்கியாவென்றிருத்தஅந்த கும்மைதிலேயேத்த 11

சேர்மானமுன்றெழுத்தின் சேதிசொல்லக்கேளும்
செப்பியதுமூன்றெழுத்து முப்பொருளுமிதுவாம் 12

முப்பொருளுமிதுவானால் முறையாகச்சொல்லும்
முகம்மதென்றுசொல்வது முடிவில்வருமீமாம் 13

மீமுகம்மதுற்றகுலும் விளம்புகின்றதாயாம்
முன்னுரைத்தகூவும்முன்னோ ருரும்தம்மதந்தை 14

நாமாகும்யாவென்பது நமதுபிகாஆதம்
நாடுந்தவமுப்பொருளி நவிலெழுத்துமூன்றும் 15

எழுத்துமூன்றும்துகைடான இலக்கம்ஐப்பத்தைந்தும்
அத்தலக்கமுலகவருக் கைம்பதைந்துபறுலாம் 16

ஐம்பத்தைந்துஅறுஷேணி வைம்பத்தைத்துபடியாம்
அரியோன்மிகுருஜிவிறை அறுசில்நபியானர் 17

அந்தமிகுருஜிவளம் ஆலத்துள்ளோரதித்து
அப்படியேசெய்தவமும் அப்படியாமெனவே 18

எத்தஇடப்உலகுமக்கம் எணி அறுஷைதுவால்
ஏறியதார்இறையாரங் கெதுவசனமினவே 19

உந்தியடிஉலகுமக்கம் உயர்ந்ததெஞ்சகஃபா
எழுந்தேறன்எணிமுக்றில் எழுந்தருஷ்ரசாம் 20

நல்லமதிசெயலான நாட்டம்தம்மதபீபசம்
நடுச்சுடர்நின்றுடுவது நமக்குஇறைபதுவசம் 21

நாமந்தநடுச்சுடரை நாடுக்கூடியறிந்தாம்
நபிமிறைசெய்வசனமிரு குருசுநமக்கிதுவே 22

இந்தமிகுருசுநா மிப்பச்செய்வதிதான்
இதமாகச்சொன்னபடி யெடுத்துச்செய்வதென்று 23

சித்தாதமதியோர்க்குத் தெரியும்படியுரைத்தேன்
செப்பாதஆகூத்துச் செய்திசொல்லக்கேளீர் 24

### வசனம்

ஆருவதுபாதை முகப்பத்தைச் சேர்ந்த இரண்டாவது பிரிவு ஏழா வதுமக்காம் ஆகூத்துக்கு ஐந்தாவது வணக்கம் திக்கீர் கபியைச் சேர்ந்த மூன்ருவது பிரிவையும் அதின் வணக்கத்தையும் யாதையும் பிரித்துச்சொல்கின்ற விபரத்துக்கு மறைபொருளான கவி.

இனி குருமார்களுடைய அடையாளஞ் சொல்லுகின்றது.

### விருத்தம்

வித்திலே ரவத்திருத்த பொறியின்வாறும்
 விதிவரும்வாசியுடன் ரூலத்தின்வாறும்
ஒத்துவருப் ஐந்துமுனனே மிறுத்தும்வாறும்
 ஒன்றுவிட்டு நான்குமொன் ருளவாறும்
பத்தெழுத்தும்மூரெழுத்தாய்ப் பூண்டவாறும்
 பள்ளிகொண்டுமேவிநக்கும் பாவைவாறும்
பத்து நாள்ரேகையதி விருக்கும் வாறும்
 பருவ முன்ள உருவமதில் தரிக்கும்வாறும்
பற்றநீயேபண்டாரம் ஆடுவாறும்
 பரத்தினருள்பாடிவரும் பதத்தின்வாறும்
முத்துப்பச்சைசரத்நமணி கோத்தவாறும்
 முன்னழகுப்பின்னழகும் பூண்டவாறும்
இத்தனையுங்கண்டதையும் காணுவாறும்
 இறந்தபேரெல்லோரும் பிறந்தவாறும்
எத்திசையும்பொருள்விளங்கச் சொன்னபேரை
 யெல்லோருங்குருவென்று இயம்பலாமே.

### கண்ணிகள்

இனிக்கேளுப் திக்கீர்கமி முருதியாய்த்துவெளியில்
ஏழாம்மக்காமான ஆகூத்துவிபரம். 1

தனியவனே அருமதுமாய் ஆதமுமாயான
தந்தைவித்துதாயுடலிற் ருருவாயமைந்த.

கருவுக்குள்ளேதரிக்கப்பட்ட நினைவொளிவையறிந்து
கருநிலையிலெழுந்தபுகை கழறுஞ்கமூர்மூச்சில். 2

வருகிறதிற்சேர்ந்துஒன்ருய் மவுலுமைந்தாழுந்தை
வாசலெல்லாம் நன்ருக வருந்திக்கட்டிப்பார்க்க. 3

தெரியிதுபார்கமலத்துள்ளே சேர்ந்தபத்துஎழுத்து
திரமானகுதறத்துமே யிருபத்தினெலழுத்தும். 5

ஈறத்துமொன்றுய்ச்சமைந்திருக்குந் தவிசலெகாலுமேலே
சகலகலையும்பொருந்தி தாத்துசிபத்தொன்றுய். 6

நிறத்திலொளிசுடர்நீதி ஆசிக்நமசுக்கு
நிற்கிதுபார்கூவும்மீழும் நினைவுங்கருவுமிதுதான். 7

யாருமறியாரேகமாலுல் எனக்கின்காட்சி
அறிந்தவர்கள் ஆலந்தன்னை அசதியிலும்பாரார் 8

தெரிந்துநன்றுய்ப்பகுந்துசொன்னேன் தீனவர்களறிய
திக்கீர்கபிதிடத்தஆ கூத்திதாமே. 9

இதற்குப் உயிரெழுத்தான் யாதுவகைமூன்றில்
இதைச்சேர்ந்தயாதிரண்டு எடுத்துரைக்கக்கேளும். 10

எதற்நும்பெரிதானதவம் இறைநபியுமொன்றுய்
இருப்பதென்னகூவும்மீழும் இணைத்துகும்மென்பதுவு. 11

கதித்தகொருவுறாவும்மீழும் கடுகிப்பிடிக்கரும்மாம்
கசகாமற்பிடிக்குமந்தக் கருமஞ்சொல்லக்கேளும். 12

இதுயாதிரண்டிலொன்றை இருதயத்திற்றெடுத்து
எவ்வளவும்பிசகாமல் இதுமேலேநினைவாய். 13

அதினுடையவளமறிந்து அதைக்கருத்தில்தரித்து
ஆடிவருமூர்சையுள்ளே யடுக்கியதைப்பிடித்து. 14

ஒடுக்கியுள்ளே உன்னுடலில் ஒன்பதுவழியும்
ஒழுங்காகக்குருவுரைத்த வுரைப்படியேபிடித்து. 15

மடக்கியுடலொடுக்கி கஜூதிட்டுமனம்பார்க்க
மற்றுமுள்ளபொருள் நிலையும் மற்றதெல்லாம் தெரியும். 16

உற்றசெய்தியாயுரைத்தேன் ஆகூத்துஇதுதான்
உரைக்காததப்கூத்தை யுலகவரேகேளும். 17

வசனம்

ஆருவது, முக்தியாத்தைச்சேர்ந்த எட்டாவது மக்காம் தம்கூத்துக்கு ஐந்தாவது வணக்கந் திக்கீர்கபிலைச் சேர்ந்த நான்காவது பிரிவும் அதின் வணக்கமும் யாதும் பிரித்து சொல்லுகின்ற விபரத்துக்கு மறைபொருளான கள்

இனிமேல் குருமார்களி னடையாளஞ் சொல்லுகின்றது.

விருத்தம்

ஆதியே அநாதியா யிருந்தவாறும்
அருபமே யுருவமா யெழுந்தவாறும்
தாதுபழம் மாதனையிற் பழுத்தவாறும்
தான்படர்ந்தகோவையுட கனியின்வாறும்
வாத முண்டுதாதுபழம் வளர்ந்தவாறும்
வன்னிமரக் கனிதனிலே முளைத்தவாறும்
சோதிமரம்தளும்பண ரானவாறும்
சுருபமுச ஐந்துமொன் றுனவாறும்
நீதமென்னும்இலைரண்டு இதழின்வாறும்
நிலைபாதம்நான்குமே சொன்றுனவாறும்
ஆதிமாமூன்றுதிற மானவாறும்
அந்தமரம் அட்டதிசை படர்ந்தவாறும்
வேதமென்னுங் கனிநடுவிற் பழுத்தவாறும்
வெகுபேர்களுண்டுகுல மானவாறும்
இப்புதுமை உலகத்திற் சொன்னபேரை
எல்லவருங்குருவென்று பணியலாமே

கண்ணிகள்

அறிந்து கொள்ளச்சொல்லுகின்றேன் முத்தியாத்துவெளியில்
ஐந்தாய்வணக்கம்திக்கீர் கபியின்முடிவாகும்
பொருத்துமெட்டாம்புகழும்மக்காம் தப்கூத்துவிபரம்
போத முந்தனுதநிலைபுகல் யாகூப்நுக்தொன்று
அந்தக்கருநாதமணி சூடுதிலைவொளிவு
அதுதானேயுதிரமெல்லாம் அணித்துடலாய்த்திரண்டு
வித்தையுள்ளகருவுக்குள்ளே விளைத்தகுருநிலைவு
வேக முடலெங் குமியிர் வெதுவெதுத்தே நிற்கும்
அங்கமெல்லாப் தபியாகும் அவனிலேவேறாக
அதுதானேகருநினைவு ஆசையுடனறிவு
கருநாதம்நுதல்நடுவே காபக்கபுசைனி
கண்ணுளவபார்வையொளி ஹக்கென்றறிவீரே
இன்னங்கருநாதமினிப் பேச்சுமூச்சுப்பார்வை
இரக்க முடன்கோபக்கேள்வி எதுவுமதுவாகும்

தன்னையறிந்தல்லவோ தனதுபொருளறிந்தால்
தானேதான் தானேதான் தம்பிரானுமாகும் 8

கருநிலையிற் கருநினைவைக் கருவதினலறிந்தால்
கடிதான பாவமெல்லாங் காற்றிறபஞ்சாய்ப்பறக்கும் 9

அறப்லைவத்தங்கப்போலே அங்கமுடலாவி
அனியாயமடுத்தாலும் அழுக்கைக்கழுகப்போமே 10

கருநிலையையறியாரே கழும்புபித்தளைசெம்பு
காய்ச்சிநூறுபுடமிட்டாலும் கழும்புபோகாதுவமை 11

ஒருபத்து ஒன்பதிந்த உயர்ந்தறிவுநிலையை
உலகமெல்லாமறியவென்று உவத்துரைத்ததாமே 12

உவந்துரைத்தவிதத்துக்கெல்லா முற்றசெய்தியாக
உலகமெல்லாமொழியாக வுவத்துரைக்கும்விசனம் 13

உரைத்தவிதம்இருபத்தெட்டு யாதுமிர்திலையின்திகம்
ஒன்றதிகமென்றுரைத்த யாதுமிதுவாகும். 14

ஊமையெழுத்தோரெழுத்து ஒருமூன்றுஐந்தாம்
ஓரெழுத்தேயெட்டெழுத்தா யொன்றுளவூமை 15

ஊமையதுஒன்றுமது ஒருமூன்றேயைந்து
ஒருமூன்றேயொன்பதாகி யொன்றுளபொருளாம் 16

மறையானபலகலையு மற்றுமுள்ளமொழியும்
மாநிலத்திற்பாஷையெல்லா மடக்கியொருவெழுத்தாய் 17

எங்குமதுதானாகி நிறைந்திருக்கும்பொருளாம்
எங்குமதுபலபாஷை யெவர்மொழியுஞ்சரியாம் 18

முறையானவொருபொருளின் முப்பொருளுங்கூடி
முப்பொருளும்ஒன்பதாகி முடிந்தவூமையெழுத்தாம் 19

இதுதானேயாதாகு மிதில்வணக்கம்சொல்வேன்
இதமாகவணக்கமைந்தி லேத்தமுள்ளதொன்று 20

விதமதியவணக்கமது வெளியிலும்வராது
வேதமல்லா மடக்கியுள்ளே விட்டுப்பிரியாது 21

அதியமுள்ளவணக்கம்திக்கீர் கபியதுவுமேதால்
அனுவும்பிசகாமல்மன துட்கருதிற்பொருந்தல் 22

அதையறிந்தபெரியோரை யடிபணிந்துதொழுது
அவர்போலேயதையறிந்து அறிவுக்குள்ளேதரித்து 23

அதைத்தானே அங்கத்துக்கு ளாட்டியோட்டியேற்றி
அதைமாற்றிமன்கூசை மங்கூசாய்த்திருப்பி 24

இருப்பதல்லோகபியின்திக்கீர் யாதுமுடிவாகும்
இந்தமுறையெந்தறிவு மென்றறிவதனுல்.

தறிப்பதுதான்முகத்தியாத்து பாதைமுடிவாகும்
தலஞ்செய்யும்விதத்தைதயினித் தானறியச்சொல்வேன்.

இராமாகச்சகூதுவள மிதையறிந்துதனேமறந்து
இருக்கைவிலேஎட்டிதழும் இடையிற்பதினுறும்.

இருபத்திநாலுமீறும் இதில்தநீமொன்றும்
இருபதுஐந்துமீறும் இலங்குமுள்ளேநிலையில்

உருவமில்லாதொருமீமும் உன்நிலையின்பொருளாம்
ஒரெட்டுரேகையதி லோடிவளர்ந்திருக்கும்.

சுருபத்தைவளைந்தவட்டம் சககோட்டைசமான்
கழிகொண்டவட்டத்துமே விருபத்திறைவ்மீமும

அறிவாக அத்தனேயு மழகாகத்தெரியும்
ஆயிரத்தெட்டிதழா யிலங்குமலர்மேலே.

ககநடுவாய்நினைவுதனிற் கருத்ததனேயிருந்த
கலங்கியதுதடுநுக்கதிற் கலத்தேவதுபிசிந்து.

தெரியுமந்தவிண்ணுலகிற்றெரியுமத்தப்படியே
தெரியுமதேதிருப்பார்வை திசமாதப்பொருத்த.

ஒரோமுவிண்ணுமுயர் படிதிரந்தேயேற
உடையவன்றன்குருசருஷம் தருகாவுப்தெரியும்

அரியதிரைவிலகும்படி யந்திரக்கூட்டடியில்
ஐந்திதழின்மலசினடு அவிபுமப்போதெரியும்.

பெரியவனும்பிருதிவையு முற்றதுநாமென்றே
பேதமில்லாமல்மதி பெற்றிருப்பதென்றே.

அறியவர்கள்உலகதனில் மிகுருசெஜன்றுரைப்பார்
அறியார்கள்ஆலம்வேறே அறுஷாவேறேயென்பார்.

சரியானமிகுராஜாவுலகவருக்கிதுதான்
வசயிதுமுகப்மதுற்ற குலுரைத்ததாலே.

தெரியவென்று தீனவர்க்குத் திறமானவகையைத்
தேடக்கிடையாதரத்ன திரவியமாமலையை.

பிசிலமுடனேசொன்னேன் பிர்முகப்மதென்போன்
பெரியோன்றன்பிசுமில்குறம் பேசினதென்றறிவீர்.

இதைத்தானேவுலகினுள்ளே குருவெடுத்துரைத்தார்
இதமானபிசுமில்முத லெந்தவிதங்கேளும்.

### வசனம்

பிசுமில்குறக்காவியத்தில் பிசுமியெழுத்து (19) க்கு அறிவு (19) உண்டு. அதன்விபரமாகிறது பாதை (6) மக்காம் (8) வணக்கம் (5 ஆக (19) க்கு செய்பாகம் முசாகிதா (28) க்கு தன்னுபிடி முஷாகிதா (14) போக முஷாகிதா (14) க்கு பலனில்லாமுஷாகிதா (6) போக பலனுகும் முஷாகிதா (8) க்கு வாது (208) க்கு முடிவான யாது (1) தொகுது (3) இனி பிசுமிலின் விபரம்.

### இனி பிசுமிலின் விபரம்.

### கண்ணிகள்.

வித்தைபெறும்பிசுமிலதின் எழுத்துமுதற்கடையும்
விளம்பியதஒருபத்து ஒன்பதுமேசரியாய். 1

அத்தெழுத்துக்கோரெழுத்துக் கோரறிவுமாக
ஆலமெல்லாமறியவென்று அழகாகச்சொன்னேன். 2

எந்தவையெதற்கதிகப் பிசுமிலுடவளமை
யெல்லவருமிருதயத்தி லறியக்கடனெனவும். 3

முந்தமுதல்கடைமுடிவு முறையாகவுரைப்பேன்
மூமின்களனைவோரு முவந்தறியத்தானே. 4

அறிவான அறிவுகளி லதினமுள்ள அறிவு
ஆதிதிருநாமமது தானுமதுஎதால். 5

சரியானபிசுமிம்முதல் நாமமிறையறிவாம்
சகலகலைமறையுமது பிசுமிலதின்பொருளாம். 6

அருவுருவுப்சுருபமில்லா னமைந்தவிதமெல்லாம்
அருஉருவும்சுருபமுமா யமைந்துமுடிந்ததுவாம். 7

பெரியவன்ருளமைத்ததெல்லாம் பெருஞ்சொல்லத்தெரியேன்
பெரியவனேதவிரவொரு பிரிவும்வேறேயில்லை 8

அறியவகைமித்தனேயென் றறியவகையில்லை
அத்தனையுமவனுரைத்த அருள்மறையிலடக்கம். 9

எத்தனையோகோடிமறை யிறையுரைத்ததெல்லாம்
எடுத்தொடுக்கிக்குறுஆனை யிறையறியக்கொடுத்தான். 10

முத்தானகுறுஆனுக் குயர்ந்தமறையில்லை
முன்னுரைத்தவேதமெல்லா முடிவில்லையென்றே. 11

அத்தனையுப்குறுஆனுக் குள்ளடக்கிவைத்து
அடங்காதகுறுஆனை அறும்போலேசுருக்கி. 12

கொத்தான ஆயத்தொரு ஐந்துக்குள்ளேயொடுக்கி
குல்குவல்லாவென்றுசொல்லிக் குவலயத்திலிறக்கி 13

அத்தையுமேசுருக்கியொரு ஐந்தெழுத்தாற்பிடித்து
அஃஹம்தென்றஐந்தெழுத்தால் அனைத்துமதில்முடித்தான் 14

சுத்தவன்றன்றிருவாக்கா லுரைத்தது அல்ஹம்து
கடல்மலையும்கடுகுக்குள்ளே காணும்விதப்போலே 15

மற்றவகையனைத்துமிறை மனதுகொண்டுமுடித்து
மதிப்படங்காதொருநூற்றிப் பதினான்குளெழுத்தாய் 16

அத்தையுமேஅடக்கியே அல் ஹம்துதன்னையொடுக்கி
அவனுமப்பிசுமிலென்று அதிகமாகச் சொன்னான் 17

எத்தனைக்கும்பெரியதவ மிறைநாமம்பிசுமில்
இதற்குள்ளேயடங்கும்பொரு ளெடுத்துரைப்பதரிதே 18

அந்தபிசுமில்முத லானசிதமேதால்
அணுப்போலேகொண்டபுள்ளி அலிபாகதீண்டே 19

அந்தப்புள்ளி அலிபு மமைந்ததொருபேயாம்
அத்தாத்திலானதினு லதுநினைவுசிற்றும் 20

இந்தசிற்றெமீமா இதுநாலுபிசுமாம்
இதுநாலுமவனும் மிதுவிதப்வேறிக்கே 21

அந்தாத்திலானசிற்ற லமைந்தமீமுக்குள்ளே
அமைந்தவெளிதூருன பேருமகுமுதாம் 22

பேருனதிறைநாமம் அல்லாகூவென்று
பிசாமவெட்டும் பிசுமில்லாகியாகும் 23

இத்தவகைவெட்டெழுதும் எண்கோணமாகி
எல்லாமுருப்படவே யானவிதமேதால் 24

வந்தவகைநாறுநாலா யதுநான்குபிரிவும்
வல்லமைகொண்டதுதானே அற்றகுமானுகும் 25

வந்தவிந்தையானவகை யெத்தவகையென்றால்
வகைந்துமுடிவான வளமனைத்தும்திற்றகீமாம் 26

இந்தபிசுமிலுக்குள் ளுயிரெழுத்துமூன்று
எல்லா மறைகளுக்குமெத்த முன்னதவமாமே 27

அந்தெழுத்தையின்னதென்று அதினுடையவளமும்
ஆருஞ்சொல்லார்சொன்னாலும் ஆருமறியாரே 28

அத்தெழுத்துமூன்றிலொன்று அதுதானே தாத்து
அறுதியத்துமதுதானே யதிலுமறைப்போலே 29

வந்ததுதான்உஹதத்தென்று அமைந்ததுசிரத்து
வதிலுமதைப்போலமைந்த வாஹிதியத்தாமே 30

வாஹிதியானதென்ன வனைத்துமுடிந்ததுவாம்
வரமானதவநிலையின் வாழ்த்துக்குயர்மணியாம் 31

இந்தவகையறியார்கள் மூத்தவகையறியார்
அந்தவகையறியார்க ளந்தரத்திலாவார் 32

இந்தவகையறிந்தவர்க ளெந்தனக்குங்குருவாம்
இவையறிந்தபேர்களெல்லாம் யாவுமறிந்தவராம் 33

யாவுமறிந்தவர்களென்று இருதயத்திற்சிறந்து
இவையறியவேண்டுமென்று எவருமடிதொழுதால் 34

அந்தவகையறிந்தவரை யடிபணிந்துதொழுதால்
அவர்மனதிலிரக்கம்வந்தா லனுப்பேரலேவுரைப்பார் 35

எத்தமட்டோஇறையருள்தா ளெடுக்கமட்டும்போதும்
இதற்கதிகமானதவ மில்லையில்லையில்லை 36

வந்தவரேமனமறிந்து வருடமொன்றுதெரிந்து
வள முளபேராயிருந்தால் வரிசைவளமிருத்தி 37

வளமாகஅறுநான்கு பிரிவுசொல்லித்திருத்தி
வரைத்தெழுத்துமூன்றுஞ்சொல்லி வகைபிரித்துக்கொடுத்து 38

அத்தமுன்றில்கடையெழுத்தை யாதாரமாக்கி
அதற்குமுதலதற்கடியு மதற்கடியுமதுவாம் 39

இதயாகரண்டுமது ஒன்றான பொருளை
இதற்கடியிலிதமாக இருதயத்தைமாற்றி 40

முத்தச்சொன்னஎட்டெழுத்தில் முடிவெழுத்தென்றியம்பி
முன்னேசொன்ன முடிவெழுத்தை கடையெழுத்தாற்தொழுமி 41

வந்தமுதல்வகையெழுந்தை வடிவானஎழுத்தாய்
வருமூன்றெழுத்தின்வள மொன்பதையுமறிந்து 42

முந்தமுந்தமுதலான முதலெழுத்தையுன்னி
மூன்றெழுத்தும்பிசகாமல் முடிந்துபின்னியுன்னி 43

அந்தரத்தில்மந்திரத்தை யுருபடுத்தும்விசத்தை
அடிபணிந்தார்க்கீந்தவித மருள்வோனேஆசான் 44

இத்தவகையறியாத குருமாருக்குபிராம்
இருகுல்முகமத குரைத்திறற்சொன்னேன் 45

அத்தவகையறியாரைப் பணித்தவருக்குபிராம்
அகும்மதிறகுல்நபியும் அருளியதாற்சொ[illegible]ன் 45

வந்தடிபணிந்துவகை கேட்குமவர்மனதை
வருடமொன்றுபரிசோதித்து வளமுளபேராகும். 47

சித்தசமற்செயப்படுத்தும் பேர்க்குரைப்பதல்லால்
சிதறவிடுஞ்சிறியோர்க்குச் ஜெகத்திலுரைசெய்தால். 48

வந்திடுமேகொடும்பாவம் வன்னரகிலழிவான்
வல்லோன்முகம்மதநும் வழுத்தியதாற்சொன்னேன். 49

இந்தவிதமுற்றமொழி யுற்றவருக்குரைப்பேன்
இதமாகஇசுலாத்திற் காதாரஞ்சொல்வேன். 50

ஆதாரமானவகை யாருஞ்சொன்னாதிய
ஆலமெல்லாந்தீனிசுலாம் மதிகமென்று அறிய. 51

ஆலத்துக்குள்தீன் குலமே யதிகமென்றுதெரிய
அறிவானமறைநெறியை யாருவதைக்கேளும். 52

என்னவென்றுற் காபிர்சுலாமுப்ரண்டுவிசளம்
எதுகாபிர்எதுஇசுலா மினிபேசதக்கேளும். 53

நாமனிருபேர்க்கிடையி லிபுலிசுமென்ன
நாயனுக்குப்பகையான கருமமதுரண்டு 54

நானென்றஆண்மை அநா நிய்யத்தினியென்று
நான்வேறுநீவேறென்பது நாயனுக்குப்பகையாம். 55

தின்னயமேசமாகும் நிலைத்தசொல்லேஇகலாம்
நினைவுவேறேஇறைவேறென்றால் நிச்சயமாய்க்குபிராம். 56

ஆனதிறலறிந்திறைதா னிவைவாகநினைத்து
அறுதினமுமனுப்பிசகா ததுவணக்கமிதுவாம். 57

ஐயமறஆதியென்று ஆருமினையன்றி
அவரவர்கள்தனையறிந்து தான்வணங்கவென்றே. 58

நாயனிறைதாவிலத்தில் நால்மறையும்வகுத்தான்
நல்லகருபொருநூற்றி முப்பதையும்விடுத்தான். 59

செய்யுமுறைபலநாளுஞ் சிதருமற்றோத்து
ஜெகத்திலிறையிருக்கும்வேதம் சகுபுமுழுதெல்லாம் 60

ஐயமென்றுமாற்றிதவு ருத்துமுதல்வேதம்
அதைமாற்றிமறுதாமு மழநசபூர்வேதம். 61

வையகத்திவிறக்கியதை மாற்றிமறுதாமும்
வரிசைபெறும்இஞ்சீல்மறை வந்ததுமுன்னுமே. 62

இஞ்சிவசபூர்தவுருத்து எகன்மறைமூன்றும்
இதற்குமுதலெலாகுசாற்றி மப்பதுகஃபும். 63

மிச்சமுள்ளபலஞானமெய்வகையுமுண்டும்
மேலானதவநிலைகள் மெத்தவதிலுண்டும், 64

லட்சாதிலட்சம்வகை ஞானமுள்ளதெனையும்
லக்கமடங்காதகுலம் வணக்கம்பலவகையும். 65

உச்சிதமாயுடற்கூறு முலகிலுள்ளதவமும்
உள்ளதெல்லாமூன்றுமறை கஃபிலுள்ளபொருளாம். 66

அத்தனைசெய்தாலுமவ ரறியாதவரென்றும்
ஆதிவருளனுப்பலனு மவர்கட்கிலையென்றும். 67

அத்தனைக்குமிறைதீதா றவர்கட்கிலையென்றும்
அந்தமூன்றுவேதம்கஃ புள்ளதையுமாற்றி. 68

அத்தனையிலுள்ளபொரு ளனைத்துமொன்றுயெடுக்கி
அணுவுக்குள்ளேகடல்மலைவு மடைத்தவதிசயமாம். 69

முத்துமுஹம்மதுற்ற குல்ஹபிக்குவேண்டி
முன்னவன்தன்கிருபையினால் விண்ணுமண்ணும்புகழ 70

வெற்றியுள்ளபுறுக்கானல் மேலானமறையாய்
வசனத்துக்குள்ளடங்காத வெகுகோடிதவமாம். 71

இத்தலத்திலிருக்கும்புருக் கான்மறைமேலாகும்
இம்மறைக்குமுன்மறைக்கு மதியமென்னவென்றால். 72

வெற்றியுள்ள அவூதும் மேலானபிசமிலும்
வெகுபிழையுந்தீர்த்துவைக்கும் இஸ்திஃபாரோடு. 73

அற்றருபிர்க்குலங்களெல்லாந் தீன்குலத்திலாக்கும்
அடங்காதபொருளான அவ்வல்கலிமாவும். 74

உத்தபொருளானசஹா தத்துக்கலிமாவும்
ஒழுங்கானதஸ்பீகு தவ்கீதுக்கலிமாவாம். 75

மெத்தப்பெரிதீமானி லேழிகலாமைந்தும்
மேலானவுளூவும்முழுக் காளபலவகையும். 76

வெற்றியுள்ளபாங்குடைய காமத்திமாம்தொழுகை
வேதத்திற்குஉறுதியுள்ள பறாஹுஹலால்ஹறும். 77

இத்தனைக்கும்பெரிதானம் ஆமீன்சலவாத்து
இசலாத்திற்கடையான முன்னதுசலாமும். 78

அற்றிருந்தபேர்க்கோதும் பாத்திஹாவும்பலனும்
அடங்காததறஜாவு மதற்குமுறைஜாத்தும். 79

இத்தனையுமென்றுன்கு மின்னம்வெருவிதமும்
எப்போதும்தவிரமமெலாப்பாகப்பொருந்தி. 80

ஏத்துவரும்பேரிசுலா முன்னருலமாகும்
மற்றவகையுற்றதவம் கத்தக்குபிரென்றே. 81

எரிட்டபேரிசலா மூன்ளதலமாகும்
எல்லாத்தவத்துக்கிது தானேஇமாமென்றும் 82

முன்னவன்தானிறக்கும் நாலா மறைமிலிது அதிகம்
முன்னுரைத்தமும் மறைமி லில்லையில்லையில்லை. 83

இன்னவகைகநமத்துன்னோ சித்தவமேநிறைய
இதைத்தவிர்ந்தாவிதற்குமுத லெழுத்தமறைக்கிணையாம் 84

மன்னனிறை திருமொழியை மறையாகச்சமைத்து
மாநிலத்தில்மருமுது நபிக்கிறையோன்சொன்னான். 85

என்றுமழியாதஇறை தூதுநபியுரைத்தார்
இந்தத்தவமற்றஉல முத்தக்குபிரென்றும். 86

அந்திபகலொருகோடி ஆண்டுதவஞ்செய்தும்
அணுப்பலனுமில்லையென்று அருமதிறகுலும். 87

இந்துவகிலுள்ளவருக் கிருதயமாய்ச்சொன்னார்
எல்லவருமறியவென்று இன்பமதாய்ச்சொன்னேன். 88

இருதயத்திலித்தனையு மறிந்தபெரியோர்கள்
இதமாகஇன்னம்வகை சொல்வார்தெளிவாக. 89

தெளிவானதீன்குலத்தி லுள்ளவரேகேளும்
தவிட்டாமல்தொழுதுகொண்டு வணக்கஞ்செய்யவேணும். 90

தொழுகையில்லாதெவராறுந் தோஷிப்பெரும்பாவி
தொட்டாலும்முழுகவேணும் துடக்கதிகக்கொடுமை. 91

தொழுதுவந்தாற்வணக்கமவர் தொடுத்துவந்தாசில்லை
தோஷையர்கள்வாழ்ந்துமல டிருப்பதுபோலுவமை. 92

தொழுகாமற்செய்யுமவர் வணக்கமுளதெல்லாம்
தோஷையர்கள் ஆணில்லா தீன்றெடுத்தபாலன். 93

தொழுதுவந்தார்வணக்கமவர் செய்துவந்தாசில்லை
தோப்பில்லாக்கனியருந்தித் தீர்ந்தபசியாகும். 94

தொழுதுவந்தார்வணக்கமவர் தொடுக்காதாரின்னம்
தோப்புக்குள்ளேகனிகளில்லாத் தூருமரப்போலே. 95

அன்பில்லார்வணக்கமெல்லாம் ஆற்றிற்ஜலமில்லா
அழுதுவணங்கார்தவமும் அந்தரநீராட்டம். 96

உள்ள ௬பில்லாதுற்ற ஞன்னர்செய்யும்வணக்கம்
வெள்ளெலும்பைநாய்௪ ௪ ௪தத்திலையுமதிகம். 97

வழியானகுருவில்லாத வணக்கமுமுதெல்லாம்
வையகத்திற்புருடனில்லான் வாழ்ந்தசுகமொக்கும். 98

தெரியாதகுருமாரின் திருமொழிகேட்பதுதான்
தெரிவையர்கள்குசருவைச் சேந்திருந்ததுவமை. 99

சரியானகுருவில்லாத வணக்கமுனதெல்லாம்
சாவுவில்லாக்கோழிமுட்டை யிட்டதுபோலுவமை 100

சொர்ப்பனத்தில்வந்தகுரு சொன்னவுபதேசம்
சொர்ப்பனத்திற்சேர்த்தபெண்ணு மதலையீன்றதுவமை. 101

இப்படியேயறிந்ததல்லவோ தொழுதுசெய்வார்வணக்கம்
இதமறியக்குருமாரை யெங்குந்தேடிப்பாரும். 102

தெருவீதியெங்கும்மலைவார்கள் குருமார்கள்
திருவருள்நிறைந்தபேரைத் தேடக்கிடையாதே. 103

அறியகுருபாரு மற்றஅசடரையுமறிய
அறிவுபுத்தியுள்ளவர்க்கு அறிவுவரச்சொல்வேன். 104

பெரியவர்கள்ஷறகுடைய பிசகாதவணக்கம்
பிரியாவகைதிறத்திவைப்பார் தீன்குலத்தின்வளமை. 105

குருவாமுகம்மதர்தங் கோலத்தவிராமல்
குதாவருளேயிருபதிக்கும் கோடிகோடியாகும். 106

பெரியவுபதேசம்பேசுங் குருமார்களென்று
பெரிதானகாரணங்கள் பேசுவாரனேகம், 107

அரியவுபதேசஞ்செய்யு மருள்குருமார்தன்னில்
அதிலுப்ரண்டுவிதமுமுண்டு மறியவகைசொல்வேன். 108

பீரானபீர்பெரிய பீருஜாதாவுண்டும்
பீருசாதாவேஷம்பூண்ட ஹரும்ஜாதாவுண்டும். 109

ஹரும்ஜாதாதன்செயலை கருமத்திலுலறியக்
காசினியிலுள்ளவர்க்குக் கருத்தில்வரச்சொல்வேன். 110

காரணங்களொருகோடிக் கதைகளெல்லாமுறைப்பார்
கைப்பிடித்துக்காட்சிசெய்வார் காணுமந்தப்படியே. 111

மெய்யாகஆதியிறை வேறில்லைதாமென்பார்
எந்தெந்தக்கருமமவர் தல்லதில்லையென்பார். 112

செய்யும்வகைதன்மைதீமை யவன்செயல்தானென்பார்
ஜெயமானதொழுகைஷற கேதுநமக்கென்பார். 113

வையகத்தில்ஷரீஅத்ததின் வளமையேதுஎன்பார்
வரமதிகமஹரிபத்தி லாகிப்போனோமென்···ச் 114

ஐயமில்லையாசைபாச மவன்செய்தானென்பாள்
ஆசைதீருமிடத்திலாதி யருள்நிலைதானென்பார் 115

செய்யுமிருபேரிணங்கி யாசைதீர்த்ததென்றால்
எப்போதுமிருபேர்க்கு மிறையருள்தானென்பார் 116

பையப்பையக்கொழுகியாசை கொடுத்து அச்சந்தீர்ந்து
பத்தினியையறுதலியைப் பழக்கிஹருச்செய்வான் 117

எத்தனைசெய்தாலுமுழுக் கேதுநமக்கென்பான்
இனிமேலும்ஆகிலத்தி லென்பிணைநீயென்பான் 118

சுத்தமுட்டாட்பாவிக்குபி ராம்ஹருமுசாதா
சொன்னது பொய்யாகுமிரு பேருங்குபிராகும் 119

மெய்போலேவெகுவிசளம் பேசுகின்றதவனே
மேலானவிசளமெல்லாங் கேட்கவகைசொல்வேன் 120

ஐயமறவுலகுதனி லிருக்குமனுகுலத்தில்
ஆர்தரசவாதிசொர்க்க வாதிநீரேசொல்லும் 121

மெய்யாகமவுத்துடைய ஹாலெத்தநாவி
லியம்பும்கலிமாவருமோ வராதோசொல்லும் 122

வையகத்தில்தானிறந்தால் கேள்விமறுமொழிக்கு
வகைசொல்வனோசொல்லேனோ எந்தனக்குச்சொல்லும் 123

இவ்வுலகிற்பிறக்குமுன்னே இவ்வுயிர்கள்முற்றும்
எந்தவிதம் ஆணோபெண்ணோ எடுத்துதன்றுய்ச்சொல்லும் 124

பித்தபிமேயுறுவழித்தா வித்தவுயிர்பலதும்
பெண்ணுருவோஆணுருவோ பிரித்துதன்றுய்சொல்லும் 125

இத்தவகைவிசளமாரு மெடுத்துரைக்கமாட்டார்
இத்தனையுமின்னம்வெகு கருமமிறைபாங்காம் 126

அத்துடலிலாணும்பெண்ணு முறுச்சமையும்வாறும்
ஆலத்திலேபிறந்தபின்பு அவர்கள்செயலாலே 127

வெற்றிநன்மைதீமையாண்டும் விதந்தரிக்கும்வாறும்
வெருசீமானெளியவனும் விதந்தரிக்கும்வாறும் 128

அந்தச்சீமானெளியவனு மவனேழைசீமான்
அரும்பாவியருளாளி யவன்பாவியாதல் 129

இந்தவகைவிபரமிறை யறிந்தாகசியமாம்
எடுத்துரைக்காரிறைநாம மெப்படித்தானுரைப்பார் 130

எள்ளளவுமேலான கருமமறியாதார்
உள்ளதெல்லாமறிக்கிளைக்கும் குருமார்கள்போலே 131

வள்ளலிறசூலுடைய வளமைபெருமார்க்கம்
வையகத்தில்நீள் குலத்தின் வளமையென்றேசொல்வார் 132

எள்ளளவுமொருபலனு மில்லையதிலென்பார்
எப்போதுமிருதயத்தி லென்வணக்கமென்பார் 133

உள்ளுக்குள்ளேவணக்கஞ்செய்வே னென்றுரைப்பார்வெகுபேர்
உள்வணக்கமென்றேதுங் கள்ளர்களேகேளும் 134

உள்ளுக்குள்ளேநினைவாலே யுன்மனைவியோடே
யொன்றுபடச்சேர்ந்ததனு லுனக்குப்பிள்ளையுண்டோ 135

அள்ளியள்ளிக்கையாலே யசனமுண்டாப்போலே
அனுதினமுநினைத்துப்பசி யடங்குவதுமுண்டோ 136

வெள்ளாமைசெய்வதுபோல் நினைத்துமுடியாது
வெகுதூரநடவால் நினைத்து முடியாது 137

கொள்கையுங்கொடுவகையுங் கொடுக்கல்வாங்கலில்லை
உள்ளுக்குள்ளே நினைத்ததனு லொன்றுமுடியாது 138

கள்ளத்தனம்போக்கியருள் பெற்றுமதியுற்றுக்
கருமமெல்லாஞ்சிறந்துகருத் துள்வணக்கஞ்செய்தால் 139

கத்தனிறசூல்ஷறகைச் சேர்ந்தவளமாகும்
காட்சிதவிராஷறகு தன்வணக்கமெல்லாம் 140

சுத்தநிறசூலுடைய களமானஷறகு
கருமமெல்லாமகற்றிக்கருத் துள்வணக்கமென்றால் 141

சுத்தக்குபிர்க்குலம்இலாகி யுடவணக்கமாகும்
சுஜூதுசெய்யார்சுன்னத்து ஜமாஅத்துக்குலவல்ல 142

புத்தியில்லார்ஷறகேது வணக்கமேதுஎன்பார்
பொய்யாகுமவர்விசளம் பொருந்தாமனுதறி 143

அஸ்தஃபிறுல்லாஹில் அலீமெனவேசொல்லி
அனுதினமும்ஆதம்பாத மறித்துதொழவேணும் 144

எத்தனையோவெகுகோடி யாவர்செய்யுந்தவமும்
இபுலீசுமுன்னாலே செய்ததவமாகும் 145

அத்தனையுமிபுலீசங் கறிந்துசெய்தானில்லை
அவன்வணங்காவணக்கமல்லோ நாம்வணங்கவேணும் 146

சுத்தக்குபிர்இபுலீசு சுஜூதுசெய்யா திடந்தான்
சொல்லவென்றுலோரிடமு மில்லையில்லை யில்லை 147

வல்லஇறைதனை யும்நபி தனையுமவனுடி
வையமெல்லாம்வெகுகோடி காலம்சுஜூதுதிட்டானே 148

நல்லநபியில்லாதால் நாட்டமதுதவறி
நமது பிதா ஆதத்துக்கு சுஜூது செய்தானில்லை. 149

அல்லாவுக்கு உவந்ததென்ன அகுமதுதர்மசக்கம்
அகுமதுக்கு உவந்ததென்ன வனைவருத்தீனுக. 150

அல்லாமுகம்மதிரு பேர்மனத்துக்கொன்றாய்
அதியதவம்ஆதத்துட பதமறிந்துபணிய 151

அல்லாமுகம்மதிரு பேரைமனதுற்று
ஆதத்துடபாதத்தன்னை யறிந்துதொழவேணும். 152

வல்லமையாய்ஆதத்துட பதர்வணங்காதாலே
வன்னாருக்கெதியானுன் வப்பனிபுலீக. 153

நல்லபுகழ்ஆதத்துட பாதத்தனையறிந்து
நாடிசுஜூதிட்டகுலம் நபிகுலம்தீனுகும். 154

ஆதமென்ன அவருடைய பாதமென்னவென்றால்
அறியாதபேர்களொல்லா மறியச்சொல்வேன்கேளும். 155

வேதமென்றும்ஆதமென்றும் விளம்புவதுமதுதான்
வெகுபலதாய்ச்சமையுமுன்னே அஹதியத்தாயிருந்து. 156

அதுதானேஉஹதத்தென்று அனைத்தையுமுள்ளொடுக்கி
அப்புறமும்வாகிதியா வானதிலோ ஆதம். 157

வாகிதியாவானதென்ன ஆதமுருவாச்சு
வகைவகையாய்த்தலைமுறையாய் வந்ததந்நவித்து. 158

அந்தவித்துஆதமுத றணியணிவந்ததனால்
அதுதானேஆதத்துட பாதமதுநிஜமாம். 159

வித்தைபெறும்ஆதத்துட வித்துநிறம்வெள்ளை
வெடித்தபுகையதுகாற்றாய் வெளியில்வருமூச்சாம். 160

மூச்சாகும் தம்மாகு முயிருஹயாத்தாகும்
முடியாததம்மல்லவோ ஆதமென்றுபேரு. 161

ஆச்சரியம்மூச்சுக்கொரு ஆதாரம் நலிபு
அந்தலிபும்மூச்சுமல்லோ ஆதத்துடபாதம். 162

அந்தலிபுநிலையறிந்து அதற்குசுஜூதிட்டால்
அதிகதவம்ஆதத்துட பாதமது நிஜமாம். 163

அந்தலிபுநிலையறிந்து அறியதவஞ்செய்ய
அதிகமுள்ளபெரியோரை யடிபணிந்தாற்சொல்வார். 164

எந்தனக்குத்தெரியுமென்று எண்ணிமகிழ்ந்திருப்பார்
எவ்வளவுந்தெரியாது ரவளுஞ்சொன்னாலொளிய. 165

அந்தவகையனுப்போலே தெரியும்படியுரைப்பேன்
அறிவுள்ளோரறிவதல்லால் ஆர்க்குந்தெரியாது. 166

வந்தவழியந்தாத்தே யுந்தன்விழியுற்று
வாசல்வழியற்றுப்பாச மற்றுநிலையுற்று. 167

மூந்திமுளையிரிதழு மூடித்துஒன்றாய்ப்பிடித்து
உத்திவருப்ரண்டாலே யொருமூன்றேதொடுத்து. 168

உந்தன்மதியந்தரங்கம் அந்தநிலைபிடித்து
உறுதிகொண்டுஉவந்துசுஜூ திட்டகுலப்தீனும். 169

இத்தவகையறிந்துஇபு லீசுசெய்தானில்லை
இருதயத்திவிதையறிந்து எவரும்சுஜூதிடுவீர். 170

அந்தஇபுலீசு வணங்காதஇடமிதுதான்
ஆலமெல்லாத்தீன்குலத்தோ ரறியதன்றாய்ச்சொன்னேன். 171

இத்தமட்டுமுறைத்ததல்ல இனிவுரைக்குஞ்செய்தி
இசுலாத்திலுள்ள இனி முழுக்குவகைகேளும். 172

முந்தஇசுலாத்திற்குல மானவரேகேளும்
முழுக்கறிந்து மூழ்கும்வித முறையசகச்சொல்வேன். 173

முழுக்குவிதியசகுமுன்னே முழுக்கறுக்கவேணும்
முழுக்குவிதியாகிடிலோ முழுக்கறுக்கமுடியா. 174

அழுக்கறுக்குமுறையறியார் முழுக்குமவாறுக்கசர்
அழுக்கல்லவோமுழுக்காகும் அறியவகைசொல்வேன். 175

உட்கருத்தில்முதலான ஒளுதலையுன்னி
ஒன்பதுமேயொன்றான வொருபொருளேயாணி. 176

அழுக்கற்றியாணிமதி ஆதியென்றேயூணி
அனுப்பிசகாதொருமுன்றை யனுதினமும்பேணி. 177

ஒளியாமலேசனசயுள்ள துயர்ந்தவமாகும்
ஒருமுழுக்குமணுகாதே யுறையறியார்க்கெல்லாம். 178

வழுக்காய்ப்புரந்துலகில் வந்ததாள்கள்முதலாய்
வழுவாசிமருங்கோடும் பாவமுழுக்காகும். 179

அழுக்காகுமுழுக்கைமவுத் தாகுமுன்னேயறுக்கார்
ஆகிறிலுமிழுக்காகு முழுக்கதிகநாற்றம். 180

தெளிவாகக்கமலத்தழுக் கறிக்கும்வகையிதுதான்
நிலவர்களறியவின்னத் தெளிவாகச்சொல்வேன். 181

வழியானதீன்குலத்தி லுள்ளவரேகேளும்
வாயில்வரும்பொய்யுரையும் வலுமைஹறுப்பகீரம். 182

பழிகோபம்பெருமைமற்றக் கொடுமையுமேயகற்றிப்
பட்சமனதோர்மையுற்றுப் பாலபொருளேவணங்க 183

தெளிவாகக்கமலத்தழுக் கறக்கும்வகையிதுதான்
நீனவர்கள்கலிமாவென்பா ரதின்பொருளைக்கேளும் 184

கலிமாவுரைத்தகுல மூள்ள பெரியாரே
னமாவுமென்ன கருப்பொருளுமென்னகலியென்று 185

கலியென்றபொருளுடைய கருமம்சொல்லக்கேளும்
கலியாகும் ஆசையது கருப்பொருளுமாகும் 186

அலியாருக்காலதபி தானுரைத்தவிசளம்
ஆசையின்பேர்கலியாகும் கலியுமிறைபங்காம் 187

கலியாதஇறைகலிமா ஈராறுஎழுத்தும்
சாற்றுவதுலா இலாக இல்லல்லாகு இதுவாம் 188

அல்லாகுவென்றுசொன்ன அவ்வல்கலிமாவில்
ஆறிரண்டுஎழுத்துக்குமே லானதொருகூவாம் 189

கூவாகும்ஆசையது கலியுமிதுவாகும்
குலமானகலிமாவி வின்னமொருபாதி 190

பாதிமுகம்மதுற்ற லுருல்லாகியாகும்
பாருலகில்நடக்கும்பரி மாவுமிதுதானே 191

மாவும்முகம்மதென்ற முதலில்வரும்மீமாம்
மாவுமிதுகலியு மது கலிமாவுமிதுதான் 192

கலியென்றகூவுடனே மாவென்றமீமதனைக்
கூசகாமலோரெழுத்தாய்க் குன்னென்றதைக்கோத்து 193

இழையாதெழுந்துவரும் வாசியுடன்சேர்த்து
எத்திறக்கஞ்செய்பவரே வெப்போதுமுமின் 194

மூமின்கள்செய்யுத்தவ மாங்கலிமாரண்டு
முந்தனுடவுடலுக்குள்ளே யெங்கேதிருந்தென்றால் 195

இந்தவகைகூவுமீமும் இனைத்துஒருவெழுத்தா
யிருந்தபத்திலதிற்குமந்த இடத்தைச்சொல்லக்கேளும் 196

இந்தவகைஆதியந்தம் அடிமுடிவுமுடையா
திருக்குமந்த ஆச்சரியம் எல்லவருமறியார் 197

அந்தெழுத்தையெல்லவரும் அறியப்பெருங்கடலும்
அறிந்தவரையடிபணிந்தா லதிஜயத்தைச்சொல்வார் 198

இந்தக்கலியுடன்மர மிருக்கும் நிலையறிந்து
இதைத்தானேகம[illegible] ஆருப்படுத்தவேணும் 199

உருவாகரண்டெழுத்து முன்சிரசிலுண்டும்
ஒருமிக்கவோரண்டெழுத்து முத்திமின்கீழுண்டும் 200

உத்தியின்கீழ்மலசத்துக் குயர்ந்தநிலையாகும்
உருத்தரிக்குங்கருநிலைக்கு மொக்கவேகீழாகும் 201

உருவமில்லாக்கருவையுரு வாகச்செய்யுமந்தச்
சுருபமில்லாச்சுடரொளிவு சோதியருள்நிற்கும் 202

நிற்குமந்தாண்டெழுத்தும் நிலையொன்றுவாச்ரண்டாம்
நிலையாமல்நிற்குடும் அந்தரமற்றஇடத்தில் 203

அந்திடத்திறகுலென்ற அட்சரமுன்றெழுத்தும்
அந்தவட்டம்கோட்டையுள்ளே ஆடிரண்டும்நிற்கும் 204

அந்திரமாய்நின்றும் ஆசைகொண்டுரண்டும்
அத்தகூவும்மீழுமது தானேகலிமாவாம் 205

கலியுடனேமாவரண்டும் கமலத்துக்குள்ளேற்றிக்
கசகாமல்கமலத்துள்ளே கருத்திலுநவாறல் 206

வலியஸனுக்கொடும்பிறையு முழுக்குமப்போதீரும்
வாய்முகமுமுடற்கழுவி யுளுச்செய்முழுக்கிறங்கும் 207

பலிதமுள்ளமுழுக்கிறக்கப் பரிசுத்தத்தண்ணீரில்
பற்றியுளுச்செய்தவுடன் சுத்திபெற்றோரவீர் 208

உற்றவர்களொருநேரம் தொழுநூறுவருஷம்
ஓயாததொழுகையுள்ள வுயர்ந்தபலனுதம் 209

அத்தலத்திலொருநேர மவருடையவணக்கம்
ஆயிரப்வருஷம்திக்கீர் செய்தபலனுகும் 210

இத்தலத்திரண்டெழுத்து மாற்றியேபிடிக்க
இதமறியாரெப்போது மெரிநரகிற்குழ்வார் 211

அத்தலத்தில்கலிமாவை அங்கத்துக்குள்ளறியார்
ஆர்குலமுதினறியார் அழுளரகில்வீழ்வார் 212

கத்தவன்தன்கலிமாரண்டும் கருத்துறவேயறிந்து
காசினியில்வணங்காத கள்ளத்தனமெல்லாம் 213

எத்தேசகாலமவ ரெறிநரகிற்குழ்வார்
எத்தவம்கடலோடே கவிந்தவகையாகும் 214

உற்றசெய்தியாயுரைத்தே னுலகமெல்லாமறிய
உலமாமுகம்மதவ ருரைத்தபடியாலே 215

உத்தபொருளீதென றுயர்த்தியாயுரைத்தேன்
உயர்ந்தமன்கிருபையினு லுளமதியிலதரித்தேன் 216

எத்திசைக்குங்குருவான ஏகன்மகுமூதர்
எல்லவர்க்குங்குருவாகும் எளியனுக்குங்குருவாம். 217

உற்றுமுதலுற்றதன மத்தனையுஞ்சிதற
ஒட்டிவெளிப்படுத்துமுய ராதிபெரியோனே. 218

எத்தலமுமித்தலந்தா னின்றுலகமறிய
அத்தலத்தையித்தலமென்றுருதியாக. 219

புத்திமதிபொருமையுட னருமையுமில்லாதான்
புல்லறிவனனதிரு வெல்லோருமறிய. 220

உற்றசெய்தியாகஇதை யுலகவருக் குறைத்தேன்
உலமாமுகம்மதரு முறைத்தபடியாலே. 221

சுத்தபெரியோனேறப்பில் ஆலமீனேஹாதி
கடல்மலையில்திகபிழை பொருத்தெனக்கிறங்கி. 222

உத்தவனேயடியேனுக் கனுப்போலேயிறங்கி
உன்கிருபையெந்தனுக் குதவியருளாக. 223

ஒன்றுபத்துநூறனந்த முதவிசெய்யவேண்டும்
உவந்தமனதோர்மையுற வுதவிசெய்வாயாதி. 224

மண்டலம்புகழுமகு மூதுபொருட்டாலே
மகிழ்ச்சிதரவேண்டுமிரு பதிக்குமிறையாமீன். 225

முத்தமுந்தமுதலான கலிமாவின்பொருளை
மூமின்களனைவோரு முவந்தறியச்சொல்வேன். 226

இனி கலிமாவுடைய விபரஞ்சொல்லுகின்றது

விருத்தம்.

கலிமாவில் நான்குகுலமா யெழுந்து பேரைக்
காபிரியென்னுங் குபிர்க்குலத்தில் விழுந்தபேரைக்
கலிமாவு ளுறுறவா யமைந்த பேரைக்
கலிமா வுரைத்ததையு மறியாப் பேரை
கலிமாவே கெதியென் றிருக்கும் பேரைக்
கலிமாவை வகுத்துச்சொல்லு முலகத் தோரை
கலிமாவை யறிந்துகருத் தினி விருத்திக்
காரணத்தைச் சொல்பவரை குருவென்று கருதலாமே.

கண்ணிகள்.

எத்திசையிலுள்ளமனு வானவெகுபேர்கள்
இறையோனுக்கீமா றைகுலுக்கிசலாமாய், 1

உத்தகுலப்தீனை இருக்கும்பெரியோரே
உங்கள்குலகலிமாவை யுடலிலறிவீரே

மெத்தப்பெரிதானதவம் அவ்வக்கலிமாவை
மேலியிக்குள்ளறியாத பேர்கள்மனங்கழும்பாம்.

கழும்பானகமலத்துள்ள அழுக்கையெல்லாம்நீக்கும்
காசினியில் தீன்குலமாங் கலிமாவைக்கேளும்.

கலிமாஅறிந்தகுலம் கடந்தகுலமென்பார்
கானகத்துப்பட்சிகளுங் காபிர்களுஞ்சொல்வார்.

அலிமாமஞர்க்கிறையோ னருளுங்கலிமாவில்
அறுநான்கு அட்சரமும் அங்கத்துக்குள்ளறியார்.

அங்கத்துக்குட்கலிமாவை யறியாதகுருவை
ஆதரித்தபேர்குபிராம் அழல்நரகில்வீழ்வார்.

அழியாதகலிமாவை அன்பாகவுரைப்பேன்
ஆர்குலமுத்தீனை ஆதியருளாலே.

அருள்கலிமா லாஇலாகஇல்லல்லாகுவென்றும்
அதுமேல்முஹம்மதுற்ற சூலுல்லாகியாகும்.

ஆனபுகழ்கலிமாவுக் கருநான்குஎழுத்து
அதின்பொருளை ஆலமெல்லா மறியச்சொல்லுவன்கேளும்.

தீனவரேலாஇலாக இல்லல்லாகுவென்று
திருநாமமிசைச்சேர்த்த ஈராறுஎழுத்தும்.

எழுத்திலேந்துபிரிவுமுண்டு எழுத்துநிறங்கேளும்
இதற்குமுதல்லாவென்று இருக்கும்ரண்டெழுத்து.

எழுத்திரண்டுமண்ணாகும் இருக்கும்வெள்ளையாக
இலாகவென்றுல்மூன்றுந்தண்ணீ ரிலங்குஞ்செவப்பாக.

இல்லாவென்றுல்மூன்றும்பச்சை இதுதானேகாற்று
இதுமேலும் அல்லாவென்ற அட்சரமூன்றெழுத்தும்.

அட்சரமேதக்கினியாம் அதுநிறமேகறுப்பு
ஆகாயம்றாகுநிலை கூவும்நினைவாகும்.

கூவாகுமோரெழுத்துக் குலமுயர்ந்ததங்கம்
குலமாகலிமாவில் எழுத்தீராறுதானே.

ஆனபுகழ்மகரிபத்தின் அர்த்தஞ்சொல்லக்கேளும்
அறிந்தவுடன் ஆலத்துள்ளோ ரன்றிகலசமாச்சே.

கூவாகும்றாகுநிலை கூவும்நினைவாகும்
கூவதுவுமூச்சதுவும் கூவேகுத்தாக.

கூவே குத்தாசியது கூவுமது அல்லா?
கூவுக் தள்ளோ குடிகொண்டு நாமிருப்பதாமே. 19

இருக்கும் பொருள்கூவுடைய இடத்தை இனிச்சொல்வேன்
இதனடியிலக்லாவென்ற அட்சரமுன்றெழுத்தும். 20

அல்லாவென்றுலென்னஅது அதின்பொருளைக்கேளும்
ஆலமெல்லாம்நிறைந்தஅழி யாதுபழுதில்லை. 21

பழுதணுகாதுய்யபொருள் பரமனைத்தும்பாய்ந்து
பாங்கபெறும்கூவுடைய பேருமதுதானே. 22

இத்த இறைநாமம்ரண்டு லாமரகு அலிபு
இருலாமும்நடு மூலத் திருபுறத்தில்நிற்கும். 23

நிற்குமிருலாமும் அடி மூலத்திருபுறமும்
நிஜமாகஆதப் ஹவ்வா லாகுமிருலாமே. 24

ஒக்கச்சொன்னஅலிபுநடு ஏச்சுடாண்டெழுத்தும்
ஒன்றுபட்டுவரும்விதத்தை யுவந்திங்ஙனஞ்சொல்வேன். 25

இன்னங்கலிமாவில்லா முன்றெழுத்திக்பொருள்தான்
இருதயங்கொண்டெங்குமுள்ள தொருபொருளென்றறிவீர் 26

உறைந்ததொருஇல்லாவில் முதல்அலிபுல்லாமும்
உயிர்நிலையிற்பதினுலு எழுத்துக்குமேலெழுத்தாம் 27

எழுத்தாகலாம்வயிற்றி லிருக்கும்அலிபொன்று
எல்லாத்துக்கடிலாமில் இருக்கும்அலிபொன்று. 28

ஒன்றுபோலேரண்டலிபும் லாம்வயிற்றில்நிற்கும்
ஊணிநடுப்பார்வைதுக்கத் தாகும்ரண்டலிபும். 29

நன்றுமிலாமுன்றெழுத்தின் பொருளதனைக்கேளும்
நமதுபொருளெங்குமிரை யதற்குமிணையில்லை. 30

இணையில்லாதெங்குமது இருதயத்திற்சிறந்து
இலாஹவென்றஅலிபு எழுந்தகுரற்பேச்சு. 31

துணையாகநல்லாவென்ற அலிபுநடுஹேயும்
தொகுத்தல்லவோ ஆகூவென்று துலங்கிவருமூச்சு. 32

ஆகூவென்றமூச்சுவரும் அலிபோடுஹேயும்
அகாரஉகாரமிலோ அட்சரத்திருட்டம். 33

அகாரமென்றுல்ஐந்துமுன்றும் அதுதானேஎட்டு
அட்டஅட்சரமான அதாதிமந்த்ரமதுதான். 34

உகாரமென்றுல்ரண்டுமகற் குயிர்நிலையுமச்சு
உரையறியாரெட்டு ன்றும் ரண்டறியாதேழை. 35

அறியுங்கவிமாவில்முதல் லாவென்னெருகுலாமும்
அட்சரத்தின்பொருளைதன்னுல் அவிழ்த்துரைக்கக்கேளும். 36

அறியவகைபலதுமல ஞரும்வறமில்லை
அடிமுடியுமில்லையது அருளப்பட்டதல்ல. 37

உருவுக்குள்ளேதரிக்கப்பட்ட ஒளிவுகருதாதம்
உருவழியுப் ஒளிகுறையாதுண்மையுண்மையுண்மை. 38

உண்மையுள்ளகவிமாவி லுரைத்தேன்முதற்பாதி
ஓதுகிறேன்முஹம் மதுற்ற சூலுல்லாகிபொருளை. 39

முகம்மதுற்றசூலுல்லாகி யென்றபொருள்கேளும்
முகம்மதென்றுலுண்மைகொண்டுஉண்மைகொண்டேனெனச்சொச் 40

உண்மைசொன்வதேதுவானுல் உருவம்முகம்மதுவாம்
உயிருமவனேவல்லவ ருகும்பொருளென்று. 41

பொருளசகுங்கவிமாமுன் பிரித்துரைத்ததெல்லாம்
பொருளவனுப் தாத்துவகை பிரித்தவிதமாகும். 43

அருளானதாத்தில்நின்று ஆனதேசிபாத்து
அருமதென்றஅட்சர முகம்மதுருவாச்சு 43

முகம்மதென்ற அட்சரத்தான் முழங்கியுடலாகி
முன்னொளிகொண்டொருவட்ட முண்மையுண்மையுண்மை. 44

உண்மைமுகம்மதென்றே யுறைக்குதான்செழுத்தும்
உடல்முழுதுமுருவாச்சு ஓங்குஞ்சிறந்தவிச. 45

வண்மைபெறுப்துற்றென்று வறைந்தறேமின்பொருள்தான்
வடிவானபொரும்துலங்கி வந்ததுவென்றறிவீர். 46

தனிமையில்லாதேமைஇரு பினப்பாகப்பிளந்து
தரித்ததுபார்உடலுக்குள்ளே இருமாங்காயாக. 47

உண்மைமுகம்மதுற்ற சூலுமுன்றெழுத்தும்
ஒருபொருளிலுத்தரவா லுலகாட்டமென்றும். 48

வண்மைபெரும்முன்றெழுத்தும் அடிமூலக்கோட்டை
வாசலும்நாலுண்டதற்கு வளர்ந்தெரியுந்தீயும். 49

நம்பிறசூலுல்லாவென்ற அட்சரமுன்றெழுத்தும்
நாடும்பொருளுடலுயிரும் நபியுமிறையென்று. 50

பாடிச்சொன்னமுன்றெழுத்தால் சிரகடறுக்காச்சப்
பரங்காககடைசிதன்னில் வருமேயொருஹேயும். 51

வருமேலாகஇல்லை அல்லாகுஹேயும்
வடிவுமுகம்மதுற்ற சூலுல்லாகிஹேயும். 52

இருஹேறயும்மீமுப்மூலத் திருக்குங்நுடியாக
ஈராறுஉள்ளெழுத்தில் இல்லெலன்னும்அவிபு 53

அவிபுநிலேகமலத்துள்ளே ஆடுமுயிராகும்
அதிநிலேயிற்பதிஞன்கு அட்சாமீரேழே 54

செப்பவாமுன்றங்குலம் சிறந்ததடி நிலேயிற்
சிறந்தபச்சைநடுநிலேயிற் பத்தங்குலமாமே 55

பொங்குமவானிஞெளிகொடி புகழ்ந்துமுத்திஞட்டம்
பொற்பாசனத்திலுய ரங்குலமொன்ருமே 56

பக்கமில்லாக்ஙிமாவிற் நித்தநடுநிலேயிற்
பாரமுள்ளரண்டெழுத்தும் பதித்துதலேமாறி 57

சிங்கார அவிபோடு லாமுங்கீழேமீமும்
சிறந்ததொருகாபும்நூனு மிருக்குப்ஐந்துமேலே 58

அங்கத்தின்கீழ்பேயோடு ஏயும்காபுவாவும்
அதின்கீழேநூஞுகி அமைந்ததைந்துஎழுத்தும் 59

எழுபத்துப்பத்துஒன்பதுதான் இருக்குப்பச்சைநிறத்தில்
இதற்குமுதலே அவிபு இலங்கும்ஒளிமேலாய் 60

ஆளமுத்துப்பச்சையுமாய் அமைந்தெழுத்துமுறைத்தேன்
அருமதென்றநான்செழுத்தும் அவியில்செவத்துருவில் 61

எழுத்துப்பதிஞன்குடைய இடமுநன்ருய்ச்சொன்னேன்
இதுகவிமாமஹரிபத்தென் றெவருமறிவீரே 62

மூழுத்தமுள்ள அவிபு முதலெழுத்தைக்கேளும்
முன்னளிஐநாக்கத்துமுத்தாய்முளேத்தஅவிபொன்று 63

அந்தவிபுஆதிபங்காம் அதிற்பிறந்தபவளம்
அருமதென்ற அவிபதுதான் அதிற்பிறந்தபச்சை 64

பச்சைநிறம்ஆதமல்லோ முச்சுடருமாச்சுப்
பார்வைஜபறூத்துமக்காம் நடுநிலேயிறருேன்றும் 65

தோன்றுமிதேகல்தான் சீருவில்நிலேயாம்
துலங்கும்வட்டப்ம. ாமன் மகுமூதாநிலேயில் 66

உருச்செவப்புடடல்பச்சை நூகுவெள்ளைபொனிவாம்
வுத்தநிலை அலிபதனை புறுதிகொண்டேநினைந்து 67

உயர்த்தநிலையுவநிலைநில் வணக்கமென்றேயுவந்து
உண்மையுள்ள நினைவுதன்னை யொதுங்காமல் நிறுத்தி 68

இந்தநிலை அலிபுநிலை தொழுகைநிலையெழுத்து
இனிக்கேளும்றுகூவின் தொழுகைநிலையெழுத்தை 69

அறுதல்லவோஉஹுதாதி அகுமதுறாமீதாய்
அதுநாள்குஹேபெழுத்து மறியவிண்ணோர்வணக்கம் 70

தாமுமந்தவணக்கமென்றே நாட்டங்கொண்டேதிருத்த
நலமாய்றுக்கூவுடைய நடப்புமிதுவாமே 71

அஹுதல்லவோ அகுமது முஹம்மதுஹாமீதாம்
மருமுதாமகிழ்ச்சியுள்ள நாலுமீமைநாடி 72

நாட்டமுள்ளகதிர்மதிமீன் வணக்கமிணையாக
நாம்வணங்கும்வணக்கமென்று நாடிசஜிதாஜ்செய்ய 73

ஆளவரே இருப்புடைய எழுத்தையினிக்கேளும்
அன்னைகுதாஅஹதுடனே அகுமதுமேஆதம் 74

ஆதமுடனிதுநாலும் நாலெழுத்தாயினிக்கேளும்
அறுஷுடையவணக்கம்அனை வோகுடையவணக்கம் 75

இத்தவகைநாலெழுத்து எண்ணிவேதான்தொழுக
இரவில்தொழும்ரகசியத்தின் தொழுகையெழுத்தாகும் 76

உலகுதன்னிலொருதானிற் சிறும்பிபாங்கேளீர்
ஒரிரகிலேழுதாம் தொழுகஅருள்பெறுவார் 77

நிலையானதொழுகையுட நிசமறியச்சொன்னேன்
நிச்சயமாயுறுபுடைய நேர்மைசொல்லக்கேளும் 78

உறுபென்றுசொல்லுவது உலகிலிகலாமாம்
ஒழுங்கோடேநடப்பதுதான் உறுபென்றறிவீரே 79

உறுக்காபுநிலையுடைய அருத்தஞ்சொல்லக்கேளும்
உள்ளபலகலையுடைய வுட்பொருளையறிந்து 80

அறிவதுதான்கலைநெறியை ஹாரபுநிலையாகும்
அதிசமுள்ளவுடறுக்காபு அறிந்துகொள்ளச்சொல்வேன். 81

சொல்லுகிறேன் உறுபான தீன்குலத்திலிருந்து
சுருதிநிலைமறையான ஹாறபுநிலையறிந்து. 82

எள்ளளவும்பிசகாமல் நேர்மைகொண்டுவருக
இதைத்தானேடறுக்காபு நிலையென்றுரைசெய்த. 83

நிலையாகமுரீதுடைய நிலைமைசொல்லக்கேளும்
நிலத்திலுள்ளபொருளையெல்லாம் நினைத்துமனமலைந்து. 84

நிலைதவறிநினைவுகெட்டு நிச்சயமேகுலைந்து
நிற்றலையுற்போதுகுருக் கண்டடிபணிந்து. 85

என்றுமுள்ளபெரியவரே யென்னினைவுஆடி
யெங்குமலையாமல்நிலை நிறுத்திவையுமென்ன. 86

சங்கைபெறுங்குருபதத்தின் சரணமதுசெய்தால்
சந்தோஷமானபின்பு தன்பதத்திலிருத்தி. 87

எத்தமட்டேபொருட்சுமக்க வலுமையுள்ளசென்று
எழுநான்குயாதிலொன்றும் எட்டுமக்காமுண்டும். 88

வழியாறுபாதையுண்டும் வணக்கமைந்திலொன்றும்
வருத்திவைப்பாதுதானே முரீதுநிலையாகும். 89

முரீதுநிலைபிதுவாகு முள்ளலைத்தநினைவை
மோசமென்றுமாற்றியொன்றை யுறுதிகொண்டேபிடித்து. 90

கருத்திற்பிசகாமலத்தப் படிவணக்கஞ்செய்வார்
காட்சியொன்றுங்காணுமற் கருமனக்கலங்கி. 91

இருளறைபிற்குருடர்சென்றே யிலங்குரத்னந்தேடி
எப்படியோதடுமாறு மப்படியேவுளறி. 92

பொருளானபூரணத்தைக் காணுமலலைந்து
புலச்பிளவைம்புலம்பியல்லோ போகுமவர்காலம். 93

மருளாமற்பலநினைவை மாற்றியொருநினைவாய்
மனதுதன்னைநிலை ுத்தி மானாமல் மாண்டு 94

இன்னதொருவணக்கநிலை யிணையுமில்லையென்று
இருதயங்கொண்டிருக்கும்விதந் தானேமுரீதாகும். 95

நறைசமுழுந்தாலிபுட நன்மைசொல்லக்கேளும்
தானிலத்திற்குருதேடி தாளுமடிதொழுது. 96

பெரியவரேயென்குருநாதன் சொன்னவுபதேசம்
பேரானஇறைநாமம் இன்னதென்றெடுத்து. 97

அறியவகைதெரியும்படி பிரிவெடுத்துத்தாரும்
அந்தந்த அட்சரத்தின் நிலையெடுத்துத்தாரும். 98

குருபதத்திற்பணிந்துஉப தேசமதுகேட்கில்
குருநாதன்திறமாளுற் கூறுவதைக்கேளும். 99

அறியகுருமுன்னுரைத்த அட்சரத்தைக்கேட்டு
அணுவும்பிசகாமலதை அங்கத்திற்குட்காட்டி. 100

பிரிவுசொல்லியதினுடைய பொருளெடுத்துக்காட்டிப்
போதமுள்ளதெரிசனையின் பிரிவுகளுஞ்சொல்லி. 101

ஒருபடிக்குஒருபடிதா னுயர்த்தநிலையேற்றி
ஓர்மையுள்ளவணக்கமதில் நிலைநிறுத்திவைப்பார். 102

நிலைநிறுத்தும்வணக்கமதி னொன்றானவெழுத்தும்
நிலையானவெழுத்தனைத்தும் நிற்கின்றதலமும். 103

கலகலெனத்தனியே பிரித்துமுதலுரைத்தேன்
கருத்துறவேயறிந்தவர்க்குக் காட்சிநிலையாகும். 104

திருநிலையையறிவாத திருடர்செய்யுங்கோலம்
திறமாகமுன்வணங்கும் யாதுநிலைமாற்றி. 105

பின்னையொருஅட்சரத்தைப் பெரிதென்றுசொல்லிப்
பேய்தனத்தில்வருத்திவைப்பார் பேய்மனுடர்கேளும். 106

அன்றுரைத்தவுபதேச மல்லவென்றுபோனால்
அருப்பாடுபட்டதெல்லா மந்தரமாய்ப்போச்சே. 107

இன்றுரைத்தவுபதேசம் இருதயமேகொண்டால்
இதற்குமுதலுபதேச மல்லவென்றதருத்தம். 108

அல்லவென்றபொருளென்று அணுவும்நினைவானால்
அத்தனையுங்கொடும்பாவஞ் சுத்தக்தபிராகும்

முத்தானயாதுநிலை முன்வணக்கப்போனால்
முறையாகபின்வணக்க மோசமதுவாச்சு

அத்தாட்சிசொல்லவென்னா லாகுதில்லைசடக்கை
அறிவுடையபேர்கட்கித்த அத்தாட்சிபோதும்

முறையாகமுன்வணங்கும் யாதையும்விடாமல்
முறைமுறையாய்ப்படியேறி முதறிவிற்கூடி

என்னென்னஇதற்குமுன்னே யெடுத்துரைத்தேன்கவியில்
எவ்வகையுத்தானறிந்து எழுத்துநிலையறிந்து

இலக்கும்பொருளெங்கேயென்று இருதயத்தில்நாடி
எப்போதுந்தேடுலது தாவியென்றுசொன்னேன்

தாவியென்றுதேட்டங்கொண்டு தானலையும்விசளம்
தமஹாவித்தென் றுரைக்குமந்தத் தவப்பொருளைக்கேளும்

தவதில்வர்தேடியுற் றலங்களெல்லாமலைந்து
தனதுபொருளிதுவெனவே தானறிந்துமகிழ்ந்து

நிலைத்தசொல்லைமனதிருத்தி நெடுவாசியேற்றி
நித்தனுடனுற்றிருப்பார் நிலத்திலறிவாளர்

உற்றசெய்தியாகவிதை ஒளியாமலுரைத்தேன்
உண்மையுள்ளதப்கூத்து உலகவபேதிதுதான்

இத்தலத்திலிசலாத்தி லுள்ளவரேயெல்லாம்
இருபாதமெப்போது மென்சிரத்திலேற்றி

குற்றமெல்லாம்வி தீனார் குலங்களொளியாகக்
குவலயத்தி [illegible] கொஞ்சத்தமிழாக

ஒருபத்துஏன்மதித்த வுயர்ந்ததறிவுநிலையும்
வுழுங்கானகலிமாவும் ஒரெழுத்துநிலையும் 121

தொழுகைமுரீ துடைய வெழுத்துவகைநிலையுந்
தொடுகுதிபோலுலகமெல்லாந் தோற்றும்படியாக 122

பாடிப்பாடியறிவையெல்லாம் பங்குபங்காய்ச்சொன்னோன்
பையல்பீர்முகம்மதென்போன் பகர்பிசுமில்க்குறமே 123

மெய்யான அறிவுதனை மேதினிற்படிப்போர்
மெத்தமனங்கொண்டுபுத்தி மேவிவிதைக்கேட்போர் 124

வையகத்தில்மவுத்துவரும் போதறிவைக்கேட்டு
வழுத்தயிலேமதிமறந்தே விறந்தவருங்கூட 125

துய்யவன்றன்றூதரிற சூல்பொருட்டினாலே
கன்னத்துச்சமாத்துடனே சூழ்ந்தகுழுவாக 126

மெய்யாகச்சொர்க்ககதி மேன்மையுள்ளபதவி
மெத்தவெற்றிபெற்றநபி யுற்றகொலுச்சார்பில் 127

ஐயமறசொர்க்ககதி பரகொலுவாக
அல்லாகொடுத்தருள்வானே ஆமீனுமீன் ஆமீன் 128

வெண்பா-க-விருத்தம்-10

கண்ணிகள்-590-ஆக கூடிய கவிகள்-601

பிசுமில்க்குறம் முற்றிற்று.

———